# குமரன்

## ஆரம் 15, முத்து 13

## November 11, 1937

Record no. 313

*Kumaraṉ*

*Āram 15, muttu 13*

*November 11, 1937*

Record no. 313

REG. NO. M. 1823. 16 பக்கங்கள். KUMARAN WEEKLY.

சந்தா விவரம்

உள்நாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 5–0–0
ஆறு மாதம் 3–0–0

ஸிலோன்,
ரூ. 6–0–0

பர்மா மலாய்
முதலிய
வெளிநாடு
ஒரு1-க்கு ரூ. 7–0–0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், கோர்ட் விளம்பரம் முதலியவைகளுக்கு இஞ்ச் ஒன்றுக்கு ரூ. 2–0–0
வியாபார சம்பந்தமானது ரூ. 0–12–0
ஒப்பந்த விளம்பரத்துக்கு மானேஜருக்கு எழுதவும்.

(மாதப்பதிப்பும் சேர்ந்தது.)

வியாழன் தோறும் வெளிவரும்.
PUBLISHED EVERY THURSDAY.

ஆசிரியர்:— சொ. முருகப்பா.

ஆரம் 15. காரைக்குடி, ஈஸ்வர-ஞு ஐப்பசிமீ 26உ (11–11–37) முத்து 13.

## ஸ்திரீகளும் சினிமாவும்

### ஒழுக்கமற்றவர்களைப் பூண்டோடு ஒழிக்கவேண்டும்

### அன்றுதான் தமிழ்ப்படத்துக்கு விமோசனம்

பிரபலமடைந்த பிரபாத் கம்பெனியாரின் 'சந்திரசேனு' வில் நடித்த ஸ்ரீமதி ராஜீவி அவர்கள், சென்னை ஸில்வர் ஸ்கிரீன் தீபாவளி மலரில் எழுதியிருக்கும் கட்டுரை வருமாறு:—

"குடும்ப ஸ்திரீகள் சினிமாவில் நடிக்கலாமா?" என்ற பிரச்னை சிலகாலமாகப் பத்திரிகைகளில் அடிபட்டு வருகிறது. ஒரு சாரார், குடும்ப ஸ்திரீகள் சினிமாவில் நடிப்பதற்கு முன் வந்தால் தான் தமிழ் சினிமா உருப்படும் என்கிறார்கள். மற்றொரு சாரார், "அப்பப்பா! இப்பொழுது சினிமாக் கம்பெனிகளும் ஸ்டுடியோக்களும் இருக்கும் நிலையில் கண்ணியமுள்ள ஸ்திரீகள் சினிமாவில் சேரவாவது! நம் சமூகமே அழிந்து விடும்!" என்று கூக்குரலிடுகின்றனர். இது, 'கலியாணமானுல் தான் பைத்தியம் தெளியும். ஆனல் பைத்தியம் தெளிந்தால் தான் பெண்ணைக் கொடுப்பேன்' என்ற கதையாயிருக்கிறதே என்று தோன்றுவது சகஜம்.

இது எப்படியிருப்பினும், இந்த வாதப் பிரதிவாதங்களைக் கவனித்து வரும் ஒவ்வொருவருக்கும் ஒன்று மட்டும் தெளிவாகப் புலப்படாமல் போகாது. அதாவது நமது சினிமாக் கம்பெனிகள், ஸ்டுடியோக்கள் இவைகளின் நிர்வாகம் கண்ணியமான முறையில் இல்லை என்பதுதான். அநேக முதலாளிகள், டைரெக்டர்கள்,—நடிகர்கள்- சினிமாப் படம் எடுக்கும் முயற்சியில் ஈடுபட்டவர்கள்—தங்கள் லக்ஷியத்தை மறந்துவிட்டு, தகாத செயல்களில் தங்கள் எண்ணத்தைச் செலுத்த ஆரம்பித்து விடுகிறார்கள். ஒரு படத்தில் நடிக்கும் நடிக நடிகைகளும், டைரெக்டரும், டெக்னிஷியன்களும் சகோதர மனப்பான்மையுடன் ஒத்துழைத்தால் தான் அப்படம் வெற்றியடைய முடியும்; நடிகர்களுக்கும் வெற்றியுண்டு. டைரக்டர், டெக்னிஷியன்கள், இவர்களுடைய சிரத்தை இல்லாவிட்டால் நடிகரோ, நடிகையோ வெற்றியடைய முடியாது. ஆகவே கண்ணியம் ஒழுக்கம் இவையுள்ள ஒரு ஸ்திரீ சினிமாவில் நடிக்க நேர்ந்தால் இத்தொழிலின் தற்போதைய நிலைமை அவள் முன்னேற்றத்திற்கு முட்டுக் கட்டையாயிருக்கிறது. கேவலம் சினிமாவில் வெற்றியை யுத்தேசித்து, ஒழுக்கத்தைக் கைவிட்டுக் கற்பையிழப்பதா? ஒருகாலும் முடியாது. தற்போதைய வெட்கக்கேடான நிலைமையைச் சீர்திருத்த வேண்டியது தான் முதல் அவசியம்.

குடும்ப ஸ்திரீகள், அல்லாதவர்கள் என்ற பிரிவினையின் அர்த்தமே எனக்கு விளங்கவில்லை. ஸ்திரீகளுக்கு ஒழுக்கம் தான் சிறந்த பூஷணம். அதுவே அவர்கள் பொக்கிஷம். இந்த விதிக்கு மாருக இருப்பதையும் மேற்சொன்ன பிரிவினை அனுமதிப்பது போலிருக்கிறது. இது அர்த்தமற்றது. எனவே, ஸ்திரீகள் சினிமாவில் நடிப்பதைப் பற்றி யோசிக்கும் போது, அவர்கள் ஒழுக்கத்திற்கு இடையூறுகள் இல்லாமலிருக்குமா என்றே கவனிக்க வேண்டும். தற்போதைய சினிமா உலகில் இடையூறுகள் ஏராளம். இந்த நிலைமை சீர்திருந்துவதற்கு முன் ஒழுக்கமுள்ள ஸ்திரீகள் சினிமாவில் சேருவது விரும்பத் தக்கதல்ல. கண்ணியமுள்ள ஸ்திரீகள் சினிமாவில் சேர்ந்தால் தான் சீர்திருத்தம் ஏற்படும் என்று சொல்பவர்கள், சுருங்கச் சொன்னுல், சீர்திருத்தத்திற்காகப் பல உத்தம ஸ்திரீகளின் ஒழுக்கத்தைப் பலி கொடுக்க வேண்டுமென்கிறார்கள். இது அவசியமென்று தோன்றவில்லை. இச் சீர்கேடான நிலைமைக்குக் காரணகர்த்தர்களான பல புருஷர்களின்-முதலாளிகள், டைரக்டர்கள், டெக்னிஷியன்கள், நடிகர்கள்—மனப்பான்மையில் மாறுதல் ஏற்பட வேண்டும். அப்பொழுது தான் தமிழ்ப் படங்களுக்கு விமோசனம் ஏற்படும்.

இப்பொழுது பெரும்பாலான தமிழ்ப் படங்கள் மிகக் கீழ்த்தர ரஸனையுள்ள டைரெக்டர்களால் டைரெக்ட் செய்யப் படுகின்றன; அதை விடக் கீழ்த்தர ரஸனையுள்ள முதலாளிகளின் அதிகாரப்படி எடுக்கப்படுகின்றன. இதன் விளைவு, ஆபாஸமான காக்ஷிகள், அசப்யமான கட்டங்கள். காதலைக் காட்டுவதற்குக் கட்டியணையவேண்டுமாம்; முத்தமிட வேண்டுமாம்; இல்லையேல் அது காதலாகாதாம். என்ன மதியீனம்! நியூ தியேட்டர்ஸ், பிரபாத் இக்கம்பெனியார்கள் தங்கள் படங்களில் காதல் காக்ஷிகளை எவ்வளவு அழகாகச் சித்தரித்திருக்கிறார்களென்று இந்த டைரெக்டர்கள் வந்தீப் பார்க்கட்டும். கற்பனு சக்தியில்லாத டைரெக்டர்களுக்கு, காதல் என்றால் கட்டியணைப்பது என்று தான் அர்த்தம். 'அமர்ஜோதி' யில் நந்தினி-ஸாதீர் காதலை ஸ்ரீ சாந்தாராம் அவர்களின் கற்பனை எவ்வளவு அற்புதமாகச் சித்தரித்திருக்கிறது! கதாநாயகன் நாயகியைத் தொடுவது கூட இல்லை. இன்னும், பம்பாய் டாக்கீஸாரின் 'அச்சுத் கன்யா' முழுதும் ஒரு காதல் கதை. படத்தின் ஆரம்பத்திலிருந்து முடிவு வரை காதல் ரஸம் ததும்புகிறது. என் ஞாபகத்திற்கு எட்டிய வரையில் கதாநாயகனும், நாயகியும் இப்படத்தில் ஒரு காக்ஷியிலாவது ஒருவரை ஒருவர் தொடுவதில்லை. காதலை எவ்வளவு கற்பனையுடன் சித்தரித்திருக்கிறார். டைரெகடர் ஆண் நடிகர் பெண் நடிகரைத் தொட்டு நடித்தால் தான் நடிப்பு இயற்கையாயிருக்கும் என்று சொல்வது வீண் வாதம் ஒருவரை யொருவர் தொடாமலே காதல் காக்ஷிகளைக் கூட இயற்கையாக நடிக்கலாம் என்று மேற் சொன்ன உன்னத படங்கள் நிரூபிக்கின்றன.

நல்ல காலத்தின் அறிகுறிகள் தென்படுகின்றன, கல்வியறிவும் கண்ணியமுமுள்ள ஆண் மக்கள் பலர் சினிமாத் துறையில் பிரவேசிக்கின்றனர். இத்தகையவர்களுடன் நடிப்பதினுல் பாதகம் ஒன்றும் விளையாது. கண்ணியமுள்ள ஸ்திரீகள் இந்த சந்தர்ப்பங்களை பயன் படுத்திக் கொண்டு, கண்ணியமுள்ள ஆண்களுடன் நடித்து, தமிழ் சினிமாக் கலையின் முன்னேற்றத்திற்கு உதவ இடமிருக்கிறது.

# சுவீகாரத்தின் பலன்

—அல்லது—

## ஆனந்தம் இழந்த அழகு

(AR. ராமனுதன்)

சுமார் 4-30 மணி இருக்கலாம். நமது கதாநாயகன் சுப்பிரமணியனும், அவன் சிநேகிதனான அழகப்பாவும் கையில் பந்தடிக்கும் 'பாட்'களை எடுத்துக்கொண்டு பந்தடிக்கும் மைதானத்திற்குச் சென்றார்கள். ஆம் இந்தக்காலத்தில் மாலைவேளைகளில் சிலர் பந்தாடப் போகிறார்கள். சிலர் உலாவிக்கொண்டே வெகுதூரம் போய் வருகிறார்கள். வேறு சிலர் சூத்தியான் குடி சகிதம் சூதாடுகிறார்கள். ஆனால் நம் சுப்பிரமணியம் 14 வயதுதானே நிறையப் பெற்றிருக்கிறான். அவனுடைய நண்பன் அழகப்பாவுக்கும் அதே பிராயம்தான், ஓர் இரண்டு வயதுதான் முன்பின்னாயிருக்கும். ஏன்? 14 வயதிலேதான் நமது தனவணிக சமூகத்துப் பிள்ளைகள் சூத்தியாளுடன் சேர்ந்து கூடிக் குலாவவும் சூதுகள் ஆடவும் கிளம்பிவிடுகிறார்களே; ஆனால் அத் தீயவழியெல்லாம் பணம் படைத்தவர்களுக்கன்றோ பொருத்தம்; ஆம் அது உண்மை. நமது சுப்பிரமணியனோ ஏழைக் குடும்பத்தில் பிறந்த ஏழை. அவனுடைய நண்பன் அழகப்பாவோ அவனைவிடப் பரமஏழை. ஆகையால் அவர்கள் இப்படி தீய வழியில் செல்வார்களா? சொன்னால்தான் நடக்குமா? எல்லாம் பணமல்லவா வேண்டும்? இவர்கள் மைதானத்திற்குச் செல்லும் வழியில் அழகப்பா, சுப்பிரமணியனை நோக்கி, ஏண்டா சுப்பிரமணியம் உன்னை எந்த ஊரிலோ பெரிய பணக்கார வீட்டுக்கு சுவீகாரம் செய்யப்போவதாய் என் தாய்தந்தையர்கள் சொன்னார்களே இது உண்மைதானா? நீ இப்படிப் போய்விட்டால் எங்களைத் திரும்பிக்கூடப் பார்க்கமாட்டாய்" என்றான்.

"அழகப்பா நீ சொல்வது உண்மைதான்; ஆனால் நான் அதை விரும்பவில்லை. என் தாயோ என்மேல் உயிர், அப்படியிருக்க என் தாயாரையும் என் அண்ணனையும் உன் போன்ற நண்பர்களையும் விட்டுப் பிரிவேனடா?" என்றான் சுப்பிரமணியம். இதற்குள் பந்தடிக்கும் மேடைக்கு வந்துசேர்ந்தார்கள். ஆகையால் பேச்சை நிறுத்திவிட்டு பந்தாட்டம் ஆடக்கிளம்பினார்கள், ஆட்டம் முடிந்து 6 மணிக்கு சுப்பிரமணியம் வீடு திரும்பினான். வீட்டில் நாலைந்து பெரிய மனிதர்களும் ஒரு விதவையும் சுப்பிரமணியம் தாயாரும் இரண்டு வருஷத்துக்கு முன்பு சுப்பிரமணியம் தந்தை இறந்துபோனார் ஆகையால் அவர் ஸ்தானத்தில் அவன் அண்ணாவும் உட்கார்ந்து பேசிக்கொண்டிருப்பதைப் பார்த்தவுடனே, சரிதான் நம் சுவீகாரம்பற்றித்தான் பேசிக்கொண்டிருக்கிறார்களென்று ஊகித்துக்கொண்டான் உடனே தன் தாயாரிடம் வந்து தாயே இவர்களெல்லாம் யார்? என்ன விஷயம்? என்று கேட்டான் சுப்பிரமணியம்.

அப்பா சுப்பிரமணியம் எல்லாம் உன் விஷயமாய்த்தான் வந்திருக்கிறார்கள். அதோ பார் அங்கு ஒரு விதவை இருக்கிறாளே! அவள்தான் உன்னை சுவீகாரம் செய்துகொள்ளும் தாய் என்றாள் சுப்பிரமணியம் தாயார். அம்மா, தங்களுக்கு நான் என்ன சொல்வது; எனது உயிரான தங்களையும் அண்ணாவையும் எப்படிப் பிரிந்திருப்பது? எப்படி பிறரை தாய் என்று அழைப்பது; வேண்டாம் வேண்டாம் என்றான் சுப்பிரமணியன். மகனே! நீயோ சிறு பிள்ளை. உனக்கு ஒன்றும் தெரியாது, நான் சொல்வதைக் கேள்; நம்மள் நிலமையோ மிகவும் தரித்திர நிலைமை. நீயும் உன் அண்ணனும் பத்து வருஷம் சம்பாத்தியம் செய்தாலும் உன் அண்ணனுக்கு கல்யாணம் செய்யமுடியாது. ஆகையால், நீ சுவீகாரம் போனால் ரூ 10,000 மாவது தருவார்கள், அதைக்கொண்டு அண்ணன் கல்யாணத்தை முடிக்கலாம், உனக்கும் அவர்கள் கல்யாணம் செய்துவிடுவார்கள், பின்பு நீங்கள் இருபேரும் ஆனந்தமாய் வாழலாமன்றோ என்றாள் தாய்.

"தாயே அண்ணன் கல்யாணத்தை முன்னிட்டுத்தான் என்னை விற்கிறாய் போலிருக்கு" என்றான் சுப்பிரமணியன்.

தம்பி நீ இப்படி விற்கிறது, வாங்குகிறது என்று பேசாதேயப்பா; இதெல்லாம் நம் சமூகத்தின் வழக்கம்தானேயப்பா. நீ அப்படி சுவீகாரம் போக ஒத்துக்கொள்ளாது போனால் அண்ணனுக்கு கல்யாணம் செய்ய முடியாது; உனக்கும் ஒன்றும் நடக்காது! பின் நம் சமூக ஜனங்கள் நம்மை இழிவுபடுத்துவார்கள்; நாம் எல்லோரும் கஷ்டப்படவேண்டியதுதான். இதுதான் தாய்க்குப் பிள்ளை செய்யும் உபகாரமோ? நான் பெற்ற பிள்ளை நான் சொல்வதைக் கேட்காவிட்டால் நீ என்ன எனக்குப் பிள்ளை என்றாள் கோபத்துடன் சுப்பிரமணியம் தாயார்.

அம்மா! தங்கள் நோக்கம், தாங்கள் என்ன சொன்னாலும் சரி. அதன்படி நடக்கத்தயார். கோபம்வேண்டாம் என்றான் கவலையோடு சுப்பிரமணியம்.

இதற்குள் சுப்பிரமணியம் அண்ணனும் மற்ற எல்லோரும் கூடி ரூ. (10000)ம் கொடுப்பதாகவும் சுவீகாரம் செய்ய ஒரு தேதியும் குறிப்பிட்டு முடித்து எல்லோரும் அவரவர்கள் வீட்டுக்குச் சென்றுவிட்டார்கள். அன்று இரவு படுக்கையில் நம் சுப்பிரமணியனுக்கு பலவித எண்ணங்கள் தோன்றின. இப்படி இருந்து வாழ்வதற்கு இறப்பது மேல் என்றுகூடத் தோன்றியது. ஒருவாறு மனதை நிம்மதிப்படுத்திக்கொண்டு எல்லாம் விதிப்படிதான் நடக்கும். ஆனால் தாய் சொல்லுக்கு மறுமொழி மாத்திரம் சொல்லப்படாது என்று உணர்ந்தான். பின்பு நித்திரையில் ஆழ்ந்தான். சுமார் நாலைந்து தினத்திற்குப் பின் சுவிகாரம் செய்யக் குறிப்பிட்ட நாளன்று மேள வாத்தியம் பாண்டு வாத்தியங்கள் முழங்க ஒரே தினத்தில் சுப்பிரமணியத்தை சுவீகாரம் செய்துகொண்டவர்கள் வீட்டிற்கு அழைத்துச் சென்றார்கள். சுவீகாரம் செய்து கொண்டவர்களோ ஒரு விதவை. அவர்களுக்கு பூரா ஆஸ்தியும் ரூ. 30000க்குள்தானிருக்கும். அதில் சுப்பிரமணியம் வீட்டுக்கு ரூ. 10000ம் கொடுத்துவிட்டார்களாகையால் பாக்கி ரூ. 20000குள்தான், நம் சுப்பிரமணியம் கல்யாணம் நடக்கவேண்டும். நம் சமூகத்தில் கல்யாணமென்றால் சாமான்யப்பட்ட காரியமா? கல்யாணம் நடந்தபின் வாழ்க்கை நடத்த வேண்டும்.

இதற்குள் சுப்பிரமணியனுடைய அண்ணனுக்கும் கல்யாணம் செய்ய ரூ. 10000ம் போதாமல் கடன் வேறே வாங்கிக் கல்யாணம் முடித்தார்கள்.

நம் சுப்பிரமணியத்திற்கும் இரண்டு மாதம் பின் அதே ஊரில் நல்ல அழகும், கல்வியும், அறிவும் பொருந்திய காரிகை அழகம்மை இல்லை இல்லை அழகுவை விலைவாசிகளில் பெரிய தகராறுகள் ஏற்பட்டு கடைசியில் பெண்ணின் தாய் தந்தையர்களுக்கு ரூ. 15000ம் கொடுப்பதாக ஒப்பந்தம் செய்து திருமணம் செய்தார்கள். பின்பு பணம் பூராவும் கொடுத்தார்கள். தம்பதிகள் பொருத்தந்தான். மங்கைக்கு ஏற்ற மணாளன் தான். ஆனால் பின்வாழ்க்கையல்லவா இன்பமாயிருக்க வேண்டும்.

கல்யாணம் ஆன இரண்டு மூன்று வருஷம் வரையில் தம்பதிகள் குழந்தைகளாகவே இருந்து வந்தார்கள். ஆனால் இனியும் அப்படி இருக்கமுடியுமா? இனிமேலல்லவா இல்லறவாழ்க்கை நடத்தவேண்டும், இல்லறவாழ்க்கையில் சதிபதிகளிருவரும் ஈடுபட ஆரம்பித்தார்கள். ஆனால் அவ்வூரில் மகா கொடுமி என்றும் ராக்ஷஸி என்றும் ராணி என்றும் இந்த மாபெரும் பட்டங்கள் மூன்றையும் பொதுஜனங்களிடமிருந்து பெற்றுக் கொண்ட நம் சுப்பிரமணியத்தின் சுவீகாரத் தாயார் இந்த இளந்தம்பதிகளை இல்லறவாழ்க்கையில் ஈடுபட விடுவாளா? என்ன? அவளுடைய பட்டத்திற்குகந்த செய்கைகளெல்லாம் நடத்தி இல்லறவாழ்க்கையைத் தடுத்தாள். இளந்தம்பதிகள் ஒருவரோடு ஒருவர் பேசினாலே போதும். ஒரே சண்டையும் இரைச்சலும்தான். நிற்க இத்துடனாவது விடுவாளா அந்த ராக்ஷஸி? இல்லை; உடனே அந்த ராணி என்ன செய்வாள் தெரியுமா? அவளைப் போல் துர்க்குணம்படைத்த அவள் தோழிகளிடம் சொல்வாள். எல்லா ராக்ஷஸ ராணிகளும் சேர்ந்து மனு ஜன்மத்தில் பிறந்த இளந்தம்பதிகளை திட்டு திட்டென்று திட்டுவார்கள். சமயத்தில் சாடு கொண்டு தீட்டினாலும் தீட்டுவார்களென்று பயம்தான் நம்சுப்பிரமணியத்திற்கும் அழகுக்கும். நம் அழகு சுப்பிரமணியத்திற்கு அந்த ராக்ஷஸியைக்கண்டாலோ சிம்ம சொப்பனந்தான், உடல் நடு நடுங்கிப் போகும். ஒருநாள் அந்த ராணி தோழிகளைக் கண்டு பேசுவதற்காக வெளியே போனபிறகு நம் சுப்பிரமணியம் அழகுவைக் கூப்பிட்டு கண்ணே நாம் திருமணம் செய்து கொண்டு இவ்வளவு நாளாகியும் ஒரு இன்பத்தையும் அடையவில்லை. நான் என் தாயாரிடம் இங்கு சுவிகாரம்வர நோக்கமில்லாதவனாய் எவ்வளவோ சொல்லியும் கேளாது பாழும் பணத்தை முன்னிட்டு என்னை இங்கு கொண்டுவந்து தள்ளினார்கள். என் சொந்தத் தாயாராயிருந்தால் என்னையும் உன்னையும் இவ்வளவு கஷ்டப்படுத்துவார்களா? ஏதோ கஷ்டகாலத்தினால் இங்குவந்து நாமிருவரும் கஷ்டப்படுகிறோம். எல்லாம் கடவுள் சோதனை போலும் என்றான் சுப்பிரமணியம்.

'நாதா! கவலை கொள்ளாதீர்கள். நாம் என்ன செய்யலாம் என் தாய்தந்தையர்கள் இந்த ராக்ஷஸியின் குணங்களை அறிந்திருந்தும் பாழும் பணத்துக்காக வல்லவோ என்னையும் இவளிடம் அகப்பட்டு விழிக்கும்படிசெய்தார்கள், எல்லாம் இறைவன் தான் துணை என்றாள் அழகு.

பெண்ணே நம் சமூகம் தான் என்ன சமூகம்? சுத்த மூடச்சமூகமாக விருக்கிறதே? கொடும் சண்டாளச் சமூகமாயிருக்கிறதே நம் சமூகத்தில் காதல் மணம் கிடையாது. இன்பமாக இல்லறவாழ்கை நடத்த இடமில்லை. எங்கு சென்றாலும் கஷ்டம் நம் சமூகம் எப்பொழுதுதான் சீர்திருத்தமடையுமோ என்றான் சுப்பிரமணியம்.

இதற்குள் வந்ததய்யா ராக்ஷசபூதம். வந்தவுடன் இளந் தம்பதிகளின் மேல் பாய்ந்தது. உடனே அழகு சுப்பிரமணியம் இரண்டு பேரும் மூலைக்கொருவராய் சூரியனைக் கண்ட பனிபோல் எடுத்தார்கள் ஓட்டம். எப்படியிருக்கிறது காதல் வாழ்க்கை? நம் சமூகத்தில்.

காதல் காதல் காதல் போயிற் சாதல் சாதல்' என்று நம்வீரகவி பாரதியார் பாடியிருக்கிறாரே. அதுபோல் நமது அழகு காதலை நினைந்து நினைந்து உருகி உருகி இரண்டு மாதம் சீக்கில் கஷ்டப்பட்டாள். இந்த சீக்கிற் யாராவது மருந்து தான் குடுக்கமுடியுமா கொடுத்தால்தான் சுகமடைவாளா? காதல் சீக்கில் உழன்று உயிர் நீத்தாள் அழகு அழகு இறந்தபிறகு சுப்பிரமணியத்திற்கு மறுகல்யாணம் செய்யவோ பணமில்லை செய்தாலும் சுகம்அடையப் போகிறானோ? அதுதான்கிடையாதே. ஆகையால் நம் சமூகம் சீர்திருத்தமடைந்து காதல் மணம் பெண்கல்வி விதவா விவாகம் போன்ற விஷயங்களில் முன்னேற்றமடைந்து வெற்றிபெற வேண்டுமென்று சமூக சேவை செய்ய புறப்பட்டான் நம் சுப்பிரமணியம். நம் சுப்பிரமணியத்திற்கு சமூக சேவையில் தளராத ஊக்கத்தை அளித்து காதல் மணம் பெண்கல்வி விதவா விவாகம் போன்ற விஷயங்களில் பிறர் சமூகத்தை விட நம் சமூகம் முன்னேற்றமடைந்து செட்டிநாடு செழிப்புற்று வாழ கடவுள் அருள்புரிவாராக.







## கார்த்திகைப் புதுமை

(தனவணிகன்)

நமது நகரத்தார் சமூகத்தில் சிறபையன் கட்கு "கார்த்திகைப் புதுமை" செய்யப்படுகிறது. இது ஒரு கட்டாய வரியாக இருக்கிறது. கல்யாணத்திற்கு முன் இது செய்து தீரவேண்டு மென்றிருப்பதில் பல தொல்லைகள் ஏற்படுகின்றன. பணமுள்ளவர்க்கு இதொரு வாவு செலவாக இல்லை. ஏழை எளியவர்க்குப் பெரும் கஷ்டமாக இருக்கிறது. 600, 700 ரூபாய்க்குக் குறையாமல் இதற்கு இரை கொடுக்க வேண்டியிருக்கிறது. இந்தப் பணமிருந்தால் ஒரு ஏளிய குடும்பத்துக்கு இரண்டு மூன்று வருஷ காலட் சேபம் நடந்து விடக்கூடும்.

கல்யாணத்துக்கு என்ன செய்வோம் என்று கவலைப்பட்டு வாடும் போது கார்த்திகைப்புதுமை நந்திமாதிரி நடுவில் நிற்கிறது. இதை விட்டு விடுவதால் பெரிய கெடுதல் ஒன்று மில்லை. இதொரு முக்கிய சடங்கிற் சேர்ந்தது மில்லை. தவறிச் செய்வதானாலும் சுருக்கமாக முடிக்கவேண்டும். காரைக்குடி முதலிய பல இடங்களில் இதனை உணர்ந்து மூன்று வேளையோடு முடித்து வருகின்றனர். மேலவட்டகையில் நாலு நாள் ஐந்து நாட்கள் கூட நடைபெற்று வருகிறது. இதில் கொஞ்சம் பணமுள்ளவர்கள் கண் தலைதெரியாமல் ஒரே ஆட்டாக ஆடவும் முற்படுகின்றனர். பணக்காரர் முன்னின்று தங்கள் வீட்டில் குறைத்து நடத்திக் காட்ட வேண்டும். அப்படியானால் தான் ஏழை எளியவர்க்கு சாதகமாக இருக்கும். புண்ணிய முண்டு. அப்படியல்லாமல் பணமிருக்கிறதென்ற இறுமாப்பால் ஆட்டம் போட்டால் மற்றவர்க்குக் கஷ்டமாக இருக்கிற தல்லவா?

பணக்காரரிடம் சொல்லிப் பார்க்க வேண்டும். கேட்காமல் 4, 5 நாள் என்று ஆட்டம் போடுவார்களானால் மற்றவர்கள் துணிந்து ஒரு நாளில் முடிக்க வழிபார்க்கவேண்டும். அப்படித்தான் நடக்கும். நடந்தால் பணக்காரருக்கு இருக்கிற பெருமையும் போய் விடுமன்றோ? இப்படியே பணமுள்ளவர் அடங்காப் பிடாரியாகப் போய்க்கொண்டிருந்து அடைந்தபலன் தான் என்னவென்பதை யோசிக்க வேண்டும். எப்படியும் இந்த கார்த்திகைப் புதுமையையும் அடுத்துவரும் திருவாதிரைப் புதுமையையும் இரண்டு மூன்று வேளைச் சாப்பாட்டுடன் அனுப்பிவைப்பதே நல்லதாகும்.

---

### கள்ளிலிருந்து பெட்ரோல்

மைசூரில் முயற்சி

மது விலக்குத் திட்டத்தை பம்பாய் மாகாணம் முழுமையும் கொண்டுவர முயற்சிக்கின்றனர். கலால் மந்திரி திரு. கில்டர் பின் வருமாறு ஒரு யோசனை கூறுகிறார்:—

சுத்தமாக்கப் பட்ட டினேச்சர்ட் ஸ்பிரிட்டுடன் $\frac{1}{2}$ பங்கு பைரிடீனும் $2\frac{1}{2}$ பங்கு பெட்ரோலும் சேர்க்கப் பட்டு யந்திரசக்தி மதுசாரம் செய்யப்பட்டு வருகிறது. இது பவுலர் இஞ்சின்களையும் மோட்டார் லாரிகளையும் ஓட்டுவதற்கு உபயோகமாகிறது. பெட்ரோலையும் யந்திர சக்தி மது சாரத்தையும் சேர்த்து அதைக்கொண்டு இதர மோட்டார் வண்டிகள் உபத்திரவமில்லாமல் போக வேண்டுமானால் எவ்வளவு பங்கு பெட்ரோலும் மது சாரமும் சேர்க்க வேண்டு மென்பதைத்தெரிந்துகொள்ளலாம். 5000 காலன் உற்பத்தியாக்கப் பட்டால் தான் காலன் ஒன்றுக்கு 0—6—0 வீதம் மது சாரத்தை உற்பத்தி செய்ய முடியும் என்பது மைசூரிலிருந்து தெரிகிறது. வாசனையற்ற இந்த மது சாரத்தைச் செய்வதற்கு லாபம் வரி ஆகியவை உள்பட 10-அணுவுக்கு

## அமெரிக்க கவர்னர் பதவி

### இந்தியர் அபேட்சை

திரு. டின்ஷா பெஸ்டோன்ஜி காடியாலி என்பவர் இந்தியாவைச் சேர்ந்தவர். பார்சிக்காரர். பெரிய இஞ்சினீயர். அமெரிக்க ஐக்கியமாகாணத்தைச் சேர்ந்த நியூ ஜெர்ஸி மாகாணத்தின் கவர்னர் பதவிக்கு இவர் ஒரு அபேட்சகராக நிற்கிறார்.

---

### 'திறந்த பாங்குகள்'

எதிர்கால நிலைபற்றி கனம் கிரி

"பாங்குகளுக்கு இத்தகைய பாதுகாப்பு அறைகள் தேவையில்லாததாகவும், எல்லா பாங்குகளும் திறந்திருக்கும் படியாகவும், அத்தகைய திறந்திருக்கும் பாங்குகளிலிருந்து யாரும் எப்பொருளையும் திருடாததாகவுமுள்ள ஒரு காலம் இந்த நாட்டில் உண்டாகுமென்று நான் நம்புகிறேன்." என்று கனம் வி. வி. கிரியவர்கள் உடுப்பி கனரா பாங்கிங் கார்ப்பரேஷன் லிமிடெட்டின் பாதுகாப்பு அறைகளை திறந்துவைத்த போது கூறினார்.

---

### லோதியன் வருகை

காந்திஜீயைப் பேட்டி காண்பார்.

நவம்பர் 20உயன்று லார்டு லோதியன் மார்சேல்ஸிலிருந்து இந்தியாவுக்குப் புறப்படுவார். இந்தியாவில் அவர் காந்திஜியையும், சாப்ருவையும் பேட்டி காண்பார். இந்தியாவில் புதிய சீர்திருத்தம் எவ்வாறு நடைபெறுகிறது என்பதைக் கவனிப்பார்.

---

மேல் ஆகாது இப்போது ஒரு காலன் பெட்ரோலுக்கு ரூ. 1—2—0 கொடுப்பதைவிட இது சிறந்ததாகும்.

## சென்னையில் எரியும் விளக்குகள் தொகை

சைதாப்பேட்டை, நவ 3—

சென்னை நகரில் அமுலுக்குக் கொண்டுவரப்பட்ட புதிய மின்சாரத் திட்டத்தைப்பற்றிக் கார்ப்பொரேஷன் மின்சார எஞ்சினீயர் ராவ்பகதூர் வி. வி. கிருஷ்ணசமி செட்டியார் இன்று மாலை கிண்டி எஞ்சினீயர் கலாசாலையில் பேசினார். இந்தப்புதிய திட்டம் முழுமையும் அமுலுக்கு வந்துவிட்டால் கார்ப்பொரேஷனுக்கு வருடாந்திரத்தில் ரூ. $1\frac{1}{4}$ அல்லது $1\frac{1}{2}$ லக்ஷம் லாபம் கிடைக்குமென்றும் சொன்னார். எஞ்சனீயர் கலாசாலை புரொபசர் சுப்பாராவ் அக்கிராசனம் வகித்தார்.

ராவ்பகதூர் கிருஷ்ணசாமி செட்டியார் கூறியதன் சாரமாவது:—1914-ம் வருடத்தில் சென்னையில் தெருக்களில் 400 அல்லது 500 மின்சார விளக்குகள் தானிருந்தன. தற்போது 12,600 மின்சாரவிளக்குகள் இருக்கின்றன. மின்சார விளக்குகள் அதிகமாக எண்ணை விளக்குகள் குறைந்தன. 1935 ம்வருடம் ஏப்ரல்மாதத்தில்சென்னையில் 11789மின்சார விளக்குகளும் ரங்கூனில் 3998ம், கல்கத்தாவில் 3433ம், டில்லியில் 3804ம் மைசூரில் 2040ம் பெங்களூரில் 2441ம். காரச்சியில் 2692ம், பினாங்கில் 1716ம், பம்பாயில் 1455ம். ஸிம்லாவில் 1432ம், சிங்கப்பூரில் 922ம் கொழும்புவில் 112ம் இருந்தன. இதனால் சென்னை இவ்விஷயத்தில்முன்னணியிலிருக்கிறதென்று விளங்குகிறது.

1922ம் வருடத்திற்குப்பிறகு கார்ப்பொரேஷன் சொந்தமாக மின்சாரத்தை பல பாகங்களுக்குப் பங்கிட்டது. இது தான் கார்பொரேஷன் ஏற்பாடு செய்த புதிய திட்டம். இந்தத் திட்டத்தின்படி கார்பொரேஷனுக்குச் சொந்த சப்ஸ்டேஷன்கள் இருக்கும். இப்பொழுது இராயபுரத்தில் ஐந்தும், பெரம்பூரில் ஒன்றும் இருக்கின்றன. இம்மாதிரி 13 சப்ஸ்டேஷன்களிருந்தால் கார்பொரேஷனுக்கு ஒரு லக்ஷ ரூபாய்க்குமேல் இலாபம் கிடைக்கும். மின்சாரத்திட்டத்தைப் பரிபாலிப்பதில் பல கஷ்டங்களிருக்கின்றன. இந்தக் கஷ்டங்களைக் குறைத்துக்கொள்ள வேண்டியது மிகவும் அவசியம்.





## விதவா விவாகத்திற்கு உதவி

### சமஸ்தானாதிபதியின் தாராளம்

பஞ்சாபிலுள்ள பிரீட்கோத் சமஸ்தானாதிபதி, மறுமணம் செய்துகொள்ளும் விதவைகளுக்கு பணஉதவி செய்வதாக வாக்களித்திருக்கிறார். வைதீகர்களுக்குள் இதுமிகுந்த பரபரப்பை உண்டு பண்ணியிருக்கிறதாம்!

சிறிதுகாலத்திற்குமுன் சமஸ்தானாதிபதி கிராம உத்யோகஸ்தர்களையழைத்து மறுமணம் செய்து கொள்ளும் விதவைகளுக்கு ஊக்கமளிக்குமாறு கேட்டுக் கொண்டார்.

ஓர் விதவையைக் கலியாணம் செய்பவருக்கு 50 ரூபாய் பரிசாக கொடுக்கப்படும்.

---

### நவீன மதுவிலக்குத் திட்டம்

பீஹார் கிராமங்களில் ஏற்பாடு

சட்ட உதவியில்லாமலும், ராஜீய அதிகாரமில்லாமலும் நவீன முறையில் பாட்னாவுக்கருகில் திக்காதாணுவில் மதுவிலக்குத் திட்டம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தாணுவில் 17 கிராமங்கள் இருக்கின்றன. இதில் 3000 குடிகாரர்கள் இருக்கிறார்கள். 1500 பேர் இதில் 30 வயதுக்குக் குறைந்தவர்கள். ஆயிரம் பேர் 30 வயதுக்கு மேற்பட்டவர்கள் 500 பேர் 50 வயதுக்கு மேற்பட்டவர்கள்.

முதலில் குறிப்பிட்ட கோஷ்டியினர் சாதாரணப் பழக்கமுள்ளவர்கள் தான். அவர்களை எளிதில் மாற்றிவிடலாம். அவர்கள் பகிரங்கமாகக் குடிப்பவர்களல்ல. வெட்கப்படுகிறார்கள். இரண்டாவதாகக் குறிப்பிட்டுள்ள கோஷ்டியினரைத் திருத்துவதில் சிறிது சிரமமிருக்கிறது.

இவர்களின் சொந்தக் குடும்பத்திலிருந்தே பல மாதர்களைத் தயார்செய்து அவர்களிடைப் பிரசாரம் செய்ய ஏற்பாடு செய்யப்படுகிறது.

காந்திஜி முதலிய பெருந்தலைவர்கள் எழுதிய கட்டுரைகள் அடங்கிய துண்டுப்பிரசுரங்கள், பஜனைகள், பிரசங்கங்கள் முதலியவைகள் தினந்தோறும் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

இத்திட்டத்தை ஆரம்பித்தவர் நாராயண்ஜீ என்பவராவர்.

---

### லீக் மெம்பர்களுக்கு அறைகூவல்

நவாப் இஸ்மெயில்கான், சௌத்ரிகலிக் உஸ்-ஜமான் முதலிய ஐக்கிய மாகாண சட்டசபையின் முஸ்லிம் லீக் மெம்பர்களுக்கு 25 காங்கிரஸ் முஸ்லீம் தலைவர்களும் ஜமியத் உலீமா தலைவர்களும் ஒரு அறைகூவல் விடுத்திருக்கின்றனர்.

சென்ற தேர்தல் நடைபெறும் காலத்தில் டி லீக் மெம்பர்கள் ஜமியத் உலீமாவால் ஆதரிக்கப்பட்டார்கள். மேலும் சட்டசபையில் தாங்கள் காங்கிரஸ் கட்சியோடு சேர்ந்துவிடுவதாகவும், காங்கிரஸோடு ஒத்துழைப்பதாகவும், வாக்காளர்களுக்கு வாக்களித்தார்கள். ஆனால் வாக்குறுதிப்படி அவர்கள் நடந்துகொள்ளவில்லை. முஸ்லீம் லீக்கில் சேர்ந்ததுமல்லாமல் காங்கிரஸையும் எதிர்க்க ஆரம்பித்திருக்கிறார்கள்.

ஆகவே அவர்கள் சட்டசபையிலிருந்து ராஜீநாமாச் செய்து முஸ்லிம் லீக்கின் சார்பாக மீண்டும் அபேட்சகராக நிற்கவேண்டும். ஆண்மையிருந்தால் இவ்வாறு செய்யுங்கள் என்று காங்கிரஸ் முஸ்லிம்கள் அறை கூவுகின்றனர்.

# தனவணிகர்க்கோர் வேண்டுகோள்!

( MR. பெரியணன். )

தனவணிகப் பெண்ணரசிகளின் வாழ்க்கை எனும் நீல வானத்திலே குறிக்கிடும் கருமேகங்களில் பெரும் பகுதி "வைதவ்யம்" என்னும் கார்மேகமே. நம் சமூகத்தில் சீர்திருத்தம் பெறவேண்டியதற்கான ஜாபிதாவில் "மாதர் மறுமணம்" இன்னும் இடம் பெறுவதானது, நம்முடைய பிற்போக்கான நிலையையே சுட்டிக் காண்பிக்கிறது. ஆகவே அவ்விதவைப் பேயைத் தாத்தியடிப்பதுதான் சீர்திருத்தப் பிரியர்களின் முதற்கடமை!

பால்ய விதவைகளின் ரத்தக் கண்ணீரால்—அவர்கள் உள்ளத்தெழும் உணர்ச்சிகளால்—நம்மனச்சாட்சி நம் இதயத்தில் கூடு போடுகிறதன்றோ! எவ்வளவோ சீர்திருத்தங்கள் உருவாகி (மற்றைய சமூகங்களில்!) உயிர்பெற்றுக் கொண்டிருக்கும் இக்காலத்தில், விதவைக்கு விமோசனம் கிடைக்கவில்லை யென்றால்,........நமக்குத்தான் உணர்ச்சியில்லையா? விதவா விவாக முட்டுக்கட்டையின் பயனாக, பால்ய விதவைகள் விபசாரத்திலீடுபடுகிறார்கள். (அவர்களுக்கும் மனித உணர்ச்சி இருக்கத்தானே செய்யும்!) இதைத் தவிர்த்துப் பகிரங்கமாக ஓர் கணவனை மண முடித்து வைத்தால், எவ்வளவு கண்யமாயிருக்கும்?

தமிழ் மொழிக்குப் புத்துயிரளித்த கவிச்சக்கரவர்த்தி சுப்பிரமணிய பாரதியாரின் கவிதா விலாஸத்தில் இடம் பெற்றிருக்கும்:—

"பட்டங்கள் ஆள்வதும் சட்டங்கள்
செய்வதும்
பாரினிற் பெண்கள் நடத்த வந்தோம்
எட்டும் அறிவினில் ஆணுக்கிங்கே பெண்
இளைப்பில்லை காண் என்று கும்மியடி"

என்ற கவி உண்மையாகிவிட்ட இந்நாளிலும் நாதனிழந்த நங்கையர்க்கு மறுமலர்ச்சியைத் தாராதது, வெகுவாய் வெட்கப் படத்தக்க விஷயம்!

"சாத்திரங்கள் பல கற்பராம்
சவுரியங்கள் பல செய்வராம்
மூத்த பொய்மைகள் யாவும் அழிப்பாராம்
மூடக்கட்டுகள் யாவும் தகர்ப்பாராம்"

என்ற பாரதியின் வாக்கு உயிர் பெற்றெழுவதெக்காலம்? கண்ணொன்றிலே சுண்ணாம்பும் மற்றொன்றிலே வெண்ணெயும் வைப்பது போல், ஆணுக்கோர் திட்டம்; பெண்ணுக்கோர் திட்டம்! சீர்திருத்தவாதிகள் இன்னும் இத்திட்டத்தைத் தவிடு பொடியாக்காமலிருப்பது விந்தையே!

இரு பச்சிளங் கொடிகள் ஒன்றையொன்று தழுவி பசுமையுடன் வளர்ந்து வருங்கால், துரதிருஷ்ட வசமாய் ஒன்று பட்டுப் போய்விடுகிறது; மற்றுமொரு கொடி தனித்து வாடி நிற்கும் கொடியைத் தழுவியணைத்து ஆதாவு கொடுத்தால், அதில் நன்மையைத் தவிரத் தீமை இருக்க முடியுமா? ஒருபோதுமிருக்க முடியாது! ஆகையால் பதியிழந்த பாவையர்க்கு மறுமலர்ச்சியை யளிப்பது அவசியம். சீர்திருத்தப் பிரியர்களே! மணாளனைப் பிரிந்த மங்கையர்களை "வைதவ்யம்" எனும் படுகுழியிலிருந்து மீட்கத் தீவிரமாய் வேலை செய்யுங்கள்!

நிற்க, மனித வாழ்க்கைக்கு ஜீவாதாரமான கல்வி நம் பெண்மணிகளுக்களிக்கப் படாததால், அவர்களுக்கு அறிவு வளர்ச்சி யற்றுவிடுகிறது. இக் கல்வியின்மையை நிவர்த்திக்க, கொப்பனாப்பட்டி 'கலைமகள்' பெண் கல்லூரி ஸ்தாபகர் ஆற்றும் "அறிவுப்பணிக்கு" நாம் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். அவ்வறிவுப் பணி தீர்க்காயுசுடனிருந்து பல நன்மைகளை நம் பெண் மக்களுக்குக் கல்வியளிப்பதன் மூலம் ஸேவிக்க அன்னை பராசக்தி அருள் புரிவாளாக!

"கலைமகள்" கல்லூரியைப் போல் அநேக கல்வி ஸ்தாபனங்கள் தோன்றச் செய்வது அறிவாளிகளாயுள்ள செல்வந்தர்களின் முக்கிய கடமை. கோவில்கள் கட்டுவதற்கு நம் சமூகத்தார்கள் பேர் போனவர்கள்! பெரும்பாலும், கோவில்கள் கட்டுவதன் நோக்கம் தெய்வபக்தியின் மேலீட்டாலல்ல; பெயர் பிராபல்யமடைவதற்கே! கோவில் உற்பத்தியை நிறுத்தி, பல கல்வி நிலயங்கள், தர்ம ஆஸ்பத்திரிகள் கட்டுவித்தால்............தேசமே போற்றுமல்லவா? கோவில் கட்டுவதனால் மட்டும் ஆண்டவனுடைய அன்பிற்குப் பாத்திரமாகிவிட முடியாது! ஸர்வேச்வரனால் படைக்கப்பட்ட மக்களிடத்தில் அன்பாயிருப்பது தான் ஆண்டவனுக்குத் திருப்தி. ஆகவே ஆண்டவனால் படைக்கப்பட்ட மக்களிடத்தில் அன்பாயிருப்பதினறிகுறியாக பல பல கல்விஸ்தாபனங்களும் ஆஸ்பத்திரிகளும் கட்டவேண்டும். சமூகப் பெரியார்கள் இதில் எது உன்னதமானது என்பதைச் சிந்தித்துச் செய்யும்படி கேட்டுக் கொள்கிறேன்.

சென்ற மாதம் இலங்கைக்கு ஆடிவேல் விழா பார்ப்பதனிமித்தம், பல தனவணிகத் தாய்மார்கள் வந்திருந்தார்கள். அச்செல்வந்த சகோதரிகள், கல்விச் செல்வத்தையுமடைந்திருந்தார்களானால், இலங்கையர்கள் இன்னும் கௌரவமாக மதித்திருப்பார்கள். ஆகவே பெண்களுக்குக் கல்வியளிப்பது அவஸ்யத்திலும் அவஸ்யம். படிப்பூட்டுவது குருடனுக்குக் கண் திறந்துவிடுவது போலாகுமன்றோ! பழங்கால மூடக்கொள்கைகள் பெரும்பாலும் பெண்களின் அரவணைப்பிலேயே போஷிக்கப்பட்டு வருகின்றன. அதைச் சுட்டெரிப்பதற்குக் கல்வியளிப்பது இன்றியமையததாகும்.

வாலிபர் பலர் படித்த—அறிவுள்ள பெண்களையே மணக்க விரும்புகின்றனர். ஆனால், நம் சமூகத்தில் அத்தகைய பெண்கள் கிடைப்பதரிதாயிருக்கிறதால், கலப்புமணத்தில் இச்சை கொள்கிறார்கள். ஆகையால் நம் சமூகத்திலுள்ள பெற்றோர்கள் தங்கள் பெண்பிள்ளைகளுக்குக் கல்வியளிக்கு முயற்சியிலீடுபடுவது அவசியம்.

"பெண்கல்வி" "விதவைக்கு விமோசனம்" இவைகளை நம் சமூகத்தில் தீவிரமாய், செழுமையுடன் அமுலுக்குக் கொண்டு வரும்படி சமூகப் பெரியார்களையும் சீர்திருத்தப் பிரியர்களையும் கேட்டுக் கொள்கிறேன்.

வியாபாரத்திற் கழகு விளம்பரம்—
விளம்பரத்திற் கேற்றது—
—குமரன்—













## வடசேரி வாணிபர் சமூகத்தில் விதவை மணம்

### ஸ்ரீ. சிதம்பரம் பிள்ளை தலைமை வகித்தார்

நாகர்கோயில் அக் 31—

வடசேரியில் வாணிபர் சமூகத்தில் தோழர் அய்யம்பெருமாள் செட்டியாருக்கும் ஸ்ரீமதி சிவகாமி அம்மாளுக்கும் இன்றுகாலை சுமார் 7-30 மணிக்கு மறுமண விவாகம் பெண் கிரகத்தில் நடைபெற்றது. இம்மணத்தை ஸ்ரீமான் பி. சிதம்பரம் பிள்ளை பி. ஏ. பி. எல். ('தமிழன்' பிரதம ஆசிரியர்) அவர்கள் நடத்திவைத்தார்கள். பல பெரியார்கள் விஜயம்செய்திருந்தார்கள். திருவாளர்கள் S. பூதலிங்கம், ஈ. ராமஸ்வாமி, R. ராமலிங்கம், C. S. வேலாயுதம், K. ராமய்யா ஆகிய அன்பர்கள் இவ்விவாகத்தைப் பாராட்டி பிரசங்கம் செய்தார்கள். தலைவர் ஸ்ரீ சிதம்பரம் பிள்ளை பேசுகையில் குறிப்பிட்டதாவது:—

இந்த சமஸ்தானத்தில் வசிக்கும் சுமார் 50 லக்ஷம் ஜனங்களில் 48 லக்ஷம் ஜனங்கள் விதவா விவாகத்தை ஆதரிக்கிறார்கள். சுமார் 2 லக்ஷம் பேர்களில் இந்த வாணிப சமூகத்தாரே மறு மணத்திற்குத் தடையாயிருப்பவர்கள். ஆனால் இவர்கள் இப்பொழுது இம்மாதிரி மறு மண விவாகங்களில் தலையிட்டிருப்பது பாராட்டத்தக்கதேயாகும். பெண்மக்களுக்கு சொத்துரிமை அளித்தால் நிச்சயமாகவும் விதவா மணத்திற்கு ரொம்ப அனுகூலமாயிருக்கும். ஏராளமான சொத்து பெண்களுக்கிருக்குமானால் அந்த பெண்கள் விதவைகளானாலும் வலுவிலேயே மறு கல்யாணம் செய்ய முன் வருவார்கள். டாட்டா அவர்கள் தமது உயிலில் தமது மனைவிக்கு 2 கோடி ரூபாய் எழுதி வைத்துவிட்டு, அவள் மறு மணம் செய்வதாயிருந்தால் வேறு 2 கோடி ரூபாயும் கூட ஒதுக்கிவைத்திருந்தார். இம்மாதிரி மக்களின் மனோபாவம் மாறுபடவேண்டும்.

இம்மணத்தைப் பொது ஜனங்கள் மிகவும் பாராட்டிவருகிறார்கள்.

### சிக்கலில் சிறந்த சங்கீதக் கச்சேரி

6-11-37 மாலை 5-30 மணிக்கு பனையப்பட்டி R. வினைதீர்த்தான் செட்டியாரவர்களால் சிறந்த முறையில் கச்சேரி நடத்தப்பெற்றது.

### பாரதி சங்கம், பாசியன்

இச்சங்கத்தின் இரண்டாவதாண்டு ஒன்பதாவது மாதக் கூட்டம் நிகழும் ஈஸ்வரஹூ ஐப்பசித் திங்கள் 16ஆம் நாள் (1-11-37) மாலை 5 மணிக்கு சா. ராம. மு. சித. மு. கடை அதிபர் கருப்பன் செட்டியாரவர்கள் தலைமையில் கூட்டம்இனிது ஆரம்பமானது. அவ்வமயம் M. சொக்கலிங்கம் "திருவள்ளுவர் என்பதுபற்றியும் K. R. அழகப்பன் உணவும் நீரும் என்பதுபற்றியும், S. வீரப்பசெட்டியாரவர்கள் கதர் என்பதுபற்றியும் பேசினார்கள். தலைவர் முடிவுரை கூறியதும் கூட்டம் இரவு 7 மணிக்கு இனிது நிறைவேறியது.

### பிரிவு உபசாரம்

இச்சங்கத்தின் மாஜி காரியதரிசியும் ஆரம்ப முதல் அருந்தொண்டாற்றி வந்தவருமான தோழர் திரு. அ. நாகப்பா அவர்கள் தாய்நாடு செல்வது கருதி அன்னாரவர்களுக்கு ஐப்பசித் திங்கள் 16ஆம் நாள் (1-11-37) நகரத்தார்கள் மடத்தில் ஓர் தேனீர் விருந்து அளிக்கப்பெற்றது. விருந்திற்கும் இவண் கடை அதிபர்கள் அனைவரும் சில உத்தியோகஸ்தர்களும் வந்திருந்தது குறிப்பிடத்தக்கது.

## திரு. மெ.செ.மெ.மெ. அவர்கள் நன்கொடை

காரைக்குடி முனிஸிபல் சேர்மென் திரு மெ. செ. மெ. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள் தேவகோட்டை ரோட்டிலுள்ள முனிஸிபல் ரெஸிடென்ஷியல் ஹரிஜன பள்ளிக்கூட மாணவர்களுக்கு தீபாவளி யன்று 20 ஜோடி கதர் உடைகளை நன்கொடையாக வழங்கினார்கள்.

### திரு. கதிரேசனின் ரேடியோப் பிரசங்கம்

இந்த மாதம் நடைபெறும்

கொழும்பு, நவ, 8உ

திரு. ஆர். எம். எஸ். எம். கதிரேசன் அவர்கள் நேற்று முற்பகல் நிகழ்த்தவேண்டிய "பாரதியாரும் அவரது பாக்களும்" என்னும் பொருளுரை அமைந்த ரேடியோப் பிரசங்கம் எதிர்பாரத சில அசந்தர்ப்பம் நேர்ந்தமையால் நடைபெற வில்லை. மேற்படி பிரசங்கம் இந்த நவம்பரிலேயே நிகழ்த்த ஒலிபரப்பு நிலயத்தார் ஏற்பாடு செய்வார்கள். தேதி பின்னர் அறிவிக்கப்படும்.

### காரைக்குடி பொதுநலச் சங்கம்

அவசர நிர்வாகசபைக் கூட்டம்

நமது பொதுநலச் சங்கத்தின் அவசர நிர்வாகசபைக் கூட்டம் 7-11-37 ஞாயிற்றுக்கிழமை மாலை 6 மணிக்கு காரைக்குடி மு. ராம. அவர்கள் பங்களாவில் நடைபெற்றது. சங்கத்தலைவர் ஆஜரில்லாததால் திருவாளர் மு. ராம. பெரியணன் செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள்.

அத்தருணம் அடியிற்கண்ட அவசரத் தீர்மானங்கள் காரியதரிசி ஆவி. லெ. அருணசலம் செட்டியாரவர்களால் கொண்டுவரப்பட்டு ஏகமனதாக நிறைவேறின.

1. இச்சங்கத்தலைவர் உயர் திரு. சிமு. அரு. நாராயணன் செட்டியாரவர்கள் தாயார் காலஞ்சென்றதை அறிய விசனிப்பதோடு சங்க அனுதாபத்தை திரு. நாராயணன் செட்டியாரவர்கட்கும் அன்னாது குடும்பத்தினருக்கும் அறிவிப்பதென்று தீர்மானிக்கப் பெற்றது.

2. வடக்கு இராமனதபுரம் ஜில்லா போர்டு சுமார் 1½ லெட்ச ரூபாய் வரை ரோடுஅபிவிருத்திக்காகச் செலவுசெய்வதெனத்தீர்மானித்திருப்பதில்சுமார் எழுபதாயிரம் ரூபாய்வரை நாட்டுக்கோட்டை நகரத்தார் வகுப்பினர் அளிக்க முன்வந்ததை அறிய மிக மகிழ்வதோடு அத்துடன் பெருஞ்சிரம மெடுத்து வசூலித்த அபிமானிகளையும் இச்சங்கம் பாராட்டுகிறது.

3. திரு. ராம. மு. நா. ராமனதன் செட்டியாரவர்களை நிர்வாகசபை மெம்பர்களுள் ஒருவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றது.

## தமிழர் சீர்திருத்த சங்கம் திருநெல்வேலி

### அனுதாபக் கூட்டம்

7-11-37 ஞாயிற்றுக் கிழமை மாலை 5 மணிக்கு ஷை சங்க கட்டிடத்தில் சங்கத்தின் வைஸ் பிரசிடெண்டு டாக்டர் தோழர், ஆர். வி. சொக்கலிங்கம் அவர்கள் தலைமையின் கீழ் ஓர் பொதுக் கூட்டம் நடைபெற்று கீழ்க்கண்டதீர்மானம்நிறைவேற்றப்பட்டது.

சங்கத்தலைவர் தூத்துக்குடி தோழர் K. K. A. பெரியசாமி அவர்கள் 29-10-37ல் அகால மரணமானதற்கு இக்கூட்டம் மிகவும் வருந்துகிறதோடு அவர்களது குடும்பத்தார்களுக்கும் ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவித்துக் கொள்கிறது.

சீர்திருத்தத்துறைகளில் உயர்குணங்களுடன் தியாகம் செய்துவந்த இப்பெரியாரின் உருவச்சிலை ஸ்தாபிக்க முயற்சித்து வருகிற தூத்துக்குடி நண்பர்களை இக்கூட்டம் பாராட்டுகிறது.

### மீங்காக்கோம்

2-11-37 தீபாவளியன்று மாலை 6 மணிக்கு திருவாளர் ஆத. நாராயணஞ் செட்டியார் அவர்கள் தலைமையில் ஓர் பொதுக் கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் தலைவரவர்கள் முகவுரை பகர்ந்ததன் பிறகு திரு. எஸ். துரைச்சிங்கம் அவர்கள் "காங்கிரஸும் ஒற்றுமையும்" என்பதுபற்றியும் திரு. பி. எல். அருணசலம் அவர்கள் கல்வியின் சிறப்பு என்பதுபற்றியும் திரு. பி. கணபதி அவர்கள் கைத்தொழிலும் கதரும் என்பதுபற்றியும் திரு. பி. ஆர். சாமி அவர்கள் "தீண்டாமை விலக்கு அவசியம்" என்பதுபற்றியும் திரு. கே. செல்லியான் அவர்கள்" வருங்காலமும் வாலிபர் கடமையும் என்பதுபற்றியும் திரு. ஏ. ஆர். சிதம்பரம் அவர்கள் "ஊக்கத்தைக் கைவிடேல்" என்பதுபற்றியும் மிக விரிவாகவும் அழகாகவும், தெளிவுபடவும் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அதன் பின் திருவாளர் நாகூர்மீராசாகேப், சீனிவாச ஆச்சாரி, சேதுராமன் செட்டியார் முதலியவர்களால் திருவாசகம் தேசிய கீதங்கள் மிக உருக்கமாகப் பாடப்பட்டதும் தலைவர் முகவுரைக்குப்பின், வந்தனோபசாரம் கூற 8-15-மணிக்கு இனிது கூட்டம் நிறைவெய்தியது.

### ஜில்லாபோர்டுக்கு நன்கொடை

ஸ்ரீ. A. A. ராமநாதத்தேவரவர்கள் தரும சிந்தனை

வட இராமநாதபுரம் ஜில்லா ஆதியாகுடி ஜமீன்தாரும், ரெங்கோன் பிரபல கண்டராக்டரும், உத்தம குணரும், தருமசீலரும், பொதுநலப் பிரியரும் காங்கிரஸ் பேரபிமானியுமான ஸ்ரீமான் A. A. ராமநாதத் தேவரவர்கள் திருவாடானையில் தனக்கு சொந்தமான 4000 ரூபாய் பெறுமதியுள்ள ஓர் கட்டிடத்தை தர்ம ஆஸ்பத்திரி உபயோகத்திற்காக இராமநாதபுரம் ஜில்லா போர்டுக்கு, இப்பகுதி ஏழை ஜனங்களுக்கு சீரிய முறையில் வைத்தியம் அளிக்கப் பெறல் வேண்டுமென்ற விழுமிய நோக்கத்தோடு இனமாக அளித்திருக்கிறார்கள்.

முப்பத்திரண்டு தானங்களில் மேலாகிய வைத்திய தானத்திற்காக நன்கொடையளித்திருக்கிற அன்னவர்களுடைய தர்ம சிந்தனை பாராட்டத்தக்கது என ஒரு நிருபர் எழுதுகிறார்.

## காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் சோஷலிஸ்டு கட்சி

### 14—11—37உ நிர்வாகசபைக் கூட்டம்

காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் சோஷலிஸ்டு கட்சியின் நிர்வாகசபைக் கூட்டம் 14—11—37 ஞாயிற்றுக்கிழமை பிற்பகல் 4 மணிக்கு தெற்குத் தெருவிலிருக்கும் தாகூர் வாசகசாலைக் கட்டடத்தில் நடைபெறும். அவ்வமயம் கட்சியின் எதிர்கால வேலைத்திட்டம் பற்றி யோசித்து முடிவு செய்யப்படும். என்று காரியதரிசி மு. கணபதி அறிவிக்கிறார்.

### மதகுபட்டி

7—11—37

இன்று மாலை 4½ மணிக்கு காளிஅம்மன் கோவிலிலிருந்து ஊர்வலமாக அலங்கரிக்கப்பட்ட ராஜாஜீ சவுக்கையில் வந்ததும் வானரசேனைத் தலைவர் சே. வி. குமாருசாமி தலைமையில் ஒரு பொதுக்கூட்டம் கூடியது. அவ்வமயம் கொடைக்கானல் தாலுகா காங்கிரஸ் கமிட்டி மெம்பர் எஸ். எஸ். வில்வனதபிள்ளை கொடியேற்றினார்கள். ஆர். மாதவன், எஸ. டி. முத்தையா தங்கவேலு ஆசாரி கொடி பாட்டுகள் பாடினார்கள். ஸ்ரீமான் ஆனமுத்து ஆசாரி அவர்கள் மகாத்மா காந்திபடத்தைத் திறந்து வைத்தார்கள். சிறுவர்களுக்கு சிற்றுண்டி வழங்கப்பட்டது. காரியதரிசி எஸ். டி. முத்தையாவால் வந்தன உபசாரங்கூறப் பெற்று கூட்டம் முடிந்தது.

### நாட்டரசன் கோட்டை பாரதி வாசகசாலை

நிர்வாகக் கூட்டம்

நவம்பர், 2—

இன்று கூடிய நிர்வாகக் கூட்டத்தில், காரியதரிசி திரு. சோம. லெட்சுமணன் செட்டியாரவர்களின் ராஜிநாமாவை அங்கீகரித்து ஷை பதவிக்கு திரு. சுப. மு. கண்ணப்ப செட்டியாரவர்களை ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டது என உதவிக் காரியதரிசி அறிவிக்கிறார்.

### ஒரு திருத்தம்

தனவணிக முதலாவது விதவா விவாக தம்பதிகளான பழனியப்பா வள்ளியம்மைக்கு காரைக்குடி நகரத்தார்களால் நடத்தப்பட்ட பாராட்டு விருந்தில் தம்பதிகட்கு திரு. பனை. மெ. மெ. வெங்கடாசலம் செட்டியாரவர்கள் மாலையணிவித்ததாக குமரனில் ஏற்கனவே வெளியாகியிருப்பதை திரு. சித. க. கதிரேசன் செட்டியார் மாலையணிவித்ததாகத் திருத்தி வாசிக்க வேண்டுகிறோம்.

### சொக்கநாதபுரம்

21—11—37உ

இன்று நகர மடத்தில் சிவகெங்கைத் தாலுகா காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி திருவாளர் கா. கண. க. வேலாயுதஞ் செட்டியாரவர்கள் தலைமையில் காங்கிரஸ் மெம்பர்கள் கூடி கிராமக் காங்கிரஸ் கமிட்டி நிறுவப்பெற்று மீண்டும் 2-11-37-ல் மாலை 3 மணிக்கு கமிட்டியின் சார்பாக திருவாளர் வயி, லெக்ஷ்மணஞ் செட்டியாரவர்கள் தலைமையில் பொதுக்கூட்டம் கூடி திருவாளர் விஸ்வநாதய்யர் அவர்களால் காங்கிரஸின் லெக்ஷியம், கதர் அபிவிர்த்தி, தற்போதைய மந்திரி சபையின் மகத்தான சேவையைப் பற்றியும் சொற்பொழிவாற்றப் பெற்று திருவாளர் சித. வயி. வயிரவஞ் செட்டியாரவர்களைத் தலைவராகவும் திரு. க. லெ. சுந்தரமய்யாரவர்களை உபதலைவராகவும், திரு. அழ. மெ. லெட்சுமணஞ் செட்டியாரவர்களை காரியதரிசியாகவும், திரு பீ. ஜீ. விஸ்வநாதய்யாரவர்களை உப காரிய தரிசியாகவும், திரு. பெரி. முத்து. வள்ளியப்ப செட்டியாரவர்களை பொக்கிஷதாராகவும், பதினொருவரை நிர்வாக அங்கத்தினராகவும் கொண்ட கமிட்டி அமைக்கப்பெற்றது.

# பண்டித ஜவகருக்குக் கடிதம்

## இந்திய வைத்திய முறை தாழ்வானதா?

சமீபத்தில் இந்திய வைத்தியமுறையைப் பற்றிப் பேசியது சம்பந்தமாக வைத்தியப் போசிரியர் திரு. வி. பி. கந்தசாமி ஜவ ஹருக்குப் பின் வருமாறு கடிதம் எழுதி யிருக்கிறார்:—

பரிசுத்தமான உள்ளமும் ஏழைகளி டத்து மிகுந்த கருணையும், தன்னலங்கரு தாத் தேசபக்தியும், சிறந்த தலைவ!

தங்கட்கு எனது பணிவான வணக்கம். தங்களின் சுற்றுப்பிரயாணத்தில், டில்லிக்கு வரும் வழியில், "டிப்யாக் கல்லூரி" இந்திய வைத்திய மாணவர்கள் தங்களுக்கு உபசாரப்பத்திரம் வாசித்துக் கொடுத்ததில், கமலாநேரு ஆஸ்பத்திரி ஏற்படுத்தப் போவதை ஆயுர்வேத, யூனானி வைத்திய முறைகளுக்கு ஏற்பாடுகள் செய்யவேண்டுமென்று உபசாரப் பத்திரத்தில் கேட்டிருந்ததாகவும் அதற்குத் தாங்கள், இந்திய வைத்திய முறைகளைக் காட்டினும் இங்கிலீஷ் முறைகளே சிறந்ததென்று தாங்கள் கருதுவதால் அவர்களது வேண்டுகோளுக்கிணங்க முடியாதென்று பதில் கூறிவிட்டதாக தினமணி தினசரி பத்திரிகையில் 11-10-37 திங்கள்கிழமை, ஆயுர்வேத யூனானி வைத்திய முறைகள் ஸ்ரீ ஜவஹர் அபிப்பிராயம் என்ற தலைப்பின்கீழ் எழுதப் பட்டிருந்தது.

### அது உண்மையாயின்

அடியிற்கண்ட விதமான எனது அபிப்பிராயத்தைத் தங்களுக்குப் பணிவுடன் தெரிவிக்க விரும்புகிறேன்.

### இந்திய வைத்தியம் என்பவை எவை

1. சித்தவைத்தியம்.
2. ஆயுர்வேத வைத்தியம்.
3. யூனானி வைத்தியம் என மூன்றிருக்கின்றன.

இவை ஒவ்வொன்றையும் தனித்தனியாக எத்தன்மைத் துடையதென எழுதின் விரியும்.

இந்திய வைத்திய முறைகளைக் காட்டினும் இங்கிலீஷ் வைத்திய முறைகள் எவ்வகையிற் சிறந்ததென்பதைத் தாங்கள் சொல்லவில்லை. இங்கிலீஷ்காரர்கள் நம் தேசத்துக்கு வருமுன்பு, இந்தியா எந்த வைத்தியத்தைக் கொண்டு வாழ்க்கை நடத்தியதென்று நிதானிக்கத் தங்களுக்கு அவகாசமில்லாததற்கு வருந்துகிறேன்.

### இந்திய மருத்துவ சாஸ்திரங்கள்

தமிழ் சித்த வைத்திய நூல்கள் முதற் சங்க காலமாகிய 16000 வருஷங்களுக்கு முன்றொட்டு ஆயிரக்கணக்கான நூல்கள் வழங்கிவருகின்றன.

### ஆயுர்வேத வைத்தியம்

தன்வந்திரி காலம் 1500 ஆண்டுகளாகின்றன. சரகர் காலம் அதற்கு முந்தினவாதலால் கி. பி. முதல் நூற்றாண்டுக்குப் பின்னரே வடமொழி ஆயுர்வேத நூல்கள் தோன்றின.

வடமொழி அஷ்டாங்ஹிருதயம் கி. பி. 900 லும் சாரங்கதர சங்கிதை கி. பி. 1300 லும், பாவப்ரகாசம் கி. பி. 1600 லும் தோன்றின.

### யுனானி மருத்துவம்

இது கி. பி. 600 லும் தோன்றின.

### பிறநாட்டு வைத்தியம்

கிரீக் தேச வைத்திய நூல்கள் கி. மு. 900 லும், ஆலோபாதி எதிருரை, என்ற ஆங்கில வைத்தியம் கி. பி. 1755 லும், உரோமர் மருத்துவம் கி. பி. 200 லும், ஓமியோபாதி (ஒப்புரை) கி. பி. 1753 லும் தோன்றின.

### ஆந்திர வைத்தியம்

ஆந்திரத்தில் கி. பி. 19-வது நூற்றாண்டில், நவநாத சித்த தீபிகை, சரபராஜியம் என்ற நூல்கள் தமிழ் சித்த முறைகள் தேர்ந்தெழுதப்பட்டுள்ளன.

இதிலிருந்து இந்திய வைத்திய முறைகள் எவ்வளவு பழமையானது என்றூகிக்க இடமிருக்கின்றன. இந்திய வைத்திய சாஸ்திரங்களானது பிறநாட்டு வைத்தியங்களைப் போலவே எல்லா வகைகளும் கூறப்பட்டிருப்பதோடு பிறவைத்திய நூல்களைக்காட்டினும் ஆயுளை வளர்க்கும் கற்பக மருந்துகளும் பல ஆயிரக்கணக்கான வருடங்கள் உயிரோடு வாழும் யோக முறைகளும் ஞானமார்க்கங்களும், இன்னும் பலபோதித்திருக்கின்றன.

### நோய் நீக்கும் காரணத்தையறிதல்

மக்களுடலில், இரத்தத்தில், இரும்புச் சத்தும், மயிரில் செம்புச்சத்தும், மூளையில் தங்கச்சத்தும், எலும்புகளில் வங்கச்சத்தும், நரம்புகளில் வெள்ளிச்சத்தும், உயிர்ப்பில் சூதச்சத்தும், இருக்கின்றன. இச்சத்துக்களில் உடலில் எவை குறைந்திருக்கின்றனவோ அதற்கு அந்த லோகங்களை நீற்றினமாக்கிக் கொடுத்தால் அச்சத்துக்கள் திரும்பவும் பெற்று நோய்கள் நீங்கி, உடல் நன்னிலையடையும் என்று கண்டுபிடித்துஉலோகங்களையும், பாடாணங்களையும் மருந்தாக உபயோகிக்க இந்தியாவிற்றான் முதல் முதலாக கண்டுபிடித்திருக்கிறார்கள். "எல்பின்ஸ்டன்" ஆங்கில வைத்தியாசிரியர் இந்துக்கள் தான் முதன் முதல் உலோகங்களை வைத்தியத்தில் உபயோகப்படுத்தியவர்கள் இரசத்தையும் பாடாணத்தையும் உபயோகப்படுத்த அவர்களிடமிருந்தே நாம் கற்றுக்கொண்டோமென்று கூறியிருக்கின்றார்.

ரோமன் கத்தோலிக் மதகுருவாகிய. "ரெவரெண்ட்பெஸ்கி" என்பவர் தமிழ் மொழியையும் தமிழ்வைத்திய நூல்களையும் நன்கு ஓதி, "தேம்பாவணி" யென்ற தமிழ்க் காவியமும், வேறு சில நூல்களும் எழுதியதன்றி, சித்தவைத்திய முறைகளை விளக்கும் பொருட்டு ரசகாண்டம் முதலிய தமிழ்வைத்திய நூல்களும் எழுதியிருக்கிறார்.

சுமார் 90 வருஷங்களுக்கு முன் ஈஸ்ட் இண்டியா கம்பெனியிலிருந்த ஒரு ஆங்கில டாக்டர் தமிழ் அகஸ்தியர் பரிபூரணம் நானூறு முதலிய பல நூல்களிலிருந்து மொழி பெயர்த்து ஆங்கிலத்தி லெழுதி அச்சிட்ட 2 வால்யூமாகிய தமிழ்வைத்தியப் புத்தகம், சென்னை கவர்ண்மெண்ட் "கன்னிமாரா" லைப்ரேரியில் காணக்கூடியதாயிருப்பதாகத் தெரிகிறது.

மேல் நாட்டினரான பிரெஞ்சுக்காரர்களும் கூட இந்திய வைத்திய முறைகளைப் பெரும்பாகம் அவர்கள் வாகட நூல்களில் எழுதியிருப்பதாகத் தமிழ்வைத்திய சங்கம், 2வது அறிக்கையில், சென்னையில் கூடிய தமிழ்வைத்திய சங்கம் 2வது மகாநாட்டில் தலைமை பூண்ட திருவாளர் L. D. சாமிக்கண்ணு பிள்ளை. M. A. B. L. L. B. I. S. O. லெஜிஸ்லேடிவ் கவுன்ஸில் செக்ரடெரியவர்கள் செய்த முகவுரைப் பிரசங்கத்திலிருக்கிறது.

ஜெர்மனி வைத்திய மென்றும், ஹோமியபாதிக் வைத்தியமும் ஏறக்குறைய அநேகமாக இந்திய வைத்தியமுறைகளை அநுசரித்ததாகவே யிருக்கிறதென்று தெரிகிறது. அநேக ஆராய்ச்சிக்காரர்களும் அவ்வண்ணமே கருதுகிறார்கள்.

### ஸ்ரீ நேருஜீ!

எந்த வகையிலும் இந்திய வைத்தியமானது பிற நாட்டுவைத்தியங்களுக்குப் பிற்போக்கானதென்று, ஆராய்ச்சியுள்ள நடுநிலையாளர்கள் யாரும் சொல்லத் துணியார்கள். தங்களைப்போன்ற தேசத்தலைவர்கள், இந்திய வைத்தியத்தை ஊன்றி நோக்காதிருந்தும், அதைக் கவனிப்பாரின்றி எடுப்பாரும் வளாப்பாருமில்லாத அநாதைக் குழந்தையைப் போல் அழுக்கடைய விட்டதேயன்றி வேறில்லை.

இந்திய தேசத்தில் சென்னை மாகாணத்திலே, சுமார் 117, சதுரமைலுக்கு ஜனத்தொகையில் சுமால் 35900 பேருக்கு ஒரு ஆஸ்பத்திரி யிருக்கிறதாகத் தெரிகிறது. இந்தியவைத்திய முறைகள் கையாளப்படுகிற வைத்தியர்கள் சுமார் 30000 பேர்களிருக்கிறார்கள். ஆங்கில வைத்தியசாலைகள் சுமார் 800, இருக்கின்றன. மஜராக் கிராமங்களைத் தவிர அயன் எஸ்டேட்டுக் கிராமங்கள் 22832 உள்ளன. அதன்படி 34 கிராமங்களுக்கு ஒரு ஆஸபத்திரியாகிறது. சமஸ்தானங்கள் நீங்கலா. சுமார் 10100 ஆங்கில வைத்தியாகளிருக்கிறார்கள். இதில் சுமார் 8600 கண்வைத்தியர் களிருக்கிறார்கள். இவர்களை நீக்கிப்பார்த்தால் 1500, வைத்தியர்களில் ஆங்கில வைத்தியசாலைக்கு 700 போக, 800 ஆங்கில வைத்தியர்களிருக்கிறார்கள், இந்திய வைத்திய முறைகளைக் கையாளப்படுகிற வைத்தியர்களில் ஆரிய வைத்தியர், யூனானி வைத்தியர் நீங்கலாக சித்தவைத்யர் சுமார் 25000, பேர்கள் இருக்கிறார்கள் என்று தெரிகிறது.

இங்கிலாந்திலோ சுமார் 1000 பேருக்கு ஒரு வைத்தியர் வீதம் இருக்கிறார்களென்றால், இந்தியாவில் சுமார் ஆங்கிலவைத்தியர் ஒருவரைக் கொண்டு, 35900 பேர் சிகித்சை பெறுவ தெங்ஙனம்?

ஆகையால், இந்தியாவில் 100க்கு 90 பிரசென்ட் இந்திய வைத்திய முறைகளைக் கொண்டு தான் சிகித்ஸை பெற்றுப் பூரண குணமடைகிறார்கள்.

### செலவு

ஆங்கில வைத்தியத்தில் பேஷண்டு ஒன்றுக்கு சுமார் 3 அணு முதல் 6 அணுவரை செலவாகிறது. இந்திய வைத்திய முறையில் பேஷண்டு ஒன்றுக்குச் சுமார் 6 பைசா முதல் 8 பைசாவரை செலவாகிறது. பிற வைத்தியங்களில் தீராத, குஷ்டம், காசம், வாதம், மேகப்புண், குன்மம் முதலிய பெரு நோய்களும் இந்திய வைத்தியத்தில் குணப்படுகின்றன.

ஆங்கில வைத்தியசாலை ஒன்று நடத்தும் செலவிலிருந்து 7, இந்திய வைத்தியசாலை வைத்து நடத்தி விடலாம்.

என் சம்பந்தப்பட்ட மட்டில் பார்த்தாலும் என்னுடைய இந்திய வைத்திய சர்வீஸ் 17 வருஷத்தில் பிறவைத்தியர்களால் தீராதென்று கைவிடப்பட்ட பல்லாயிரக் கணக்கான நோயாளிகளுக்குப் பெரும் ரோகங்களை யெல்லாம் பூரண குணப்படுத்தியிருக்கிறேன்.

(11-ம் பக்கம் பார்க்க)









# காரைக்குடியில் கடையடைப்பு விஷயம்

## பஞ்சாயத்தார் தீர்மானம்

காரைக்குடியில் ஒவ்வொரு தமிழ் மாதக் கடைசி ஞாயிறன்றும் கடைகளை அடைத்து தொழிலாளர்களுக்கு விடுமுறை யளிக்க வேண்டுமென்று வர்த்தக சங்கத்தார் தீர்மானித்திருந்த விஷயமாக வியாபாரிகள் சிலரிடையே அபிப்பிராயபேத மிருந்துவந்தது. இவ்வபிப்பிராய பேதத்தை சமரசமாகத் தீர்த்துவைப்பதற்குகாரைக்குடிபோலீஸ் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் அவர்களும், டாக்டர் சுப்பிரமணியம் அவர்களும் பஞ்சாயத்தார்களாக நியமிக்கப்பட்டதும், அவர்கள் கூறுகிற முடிவுக்கு வியாபாரிகள் அனைவரும் கட்டுப்படுவதென்று தீர்மானிக்கப்பட்டதும் நேயர்களுக்குத் தெரிந்ததே.

ஷை பஞ்சாயத்தார்கள் தங்களுடைய முடிவை 4-11-37உ யன்று தெரிவித்திருக்கிறார்கள். அவர்களின் முடிவு பின் வருமாறு:—

காரைக்குடி தொழிலாளர் சங்கத்தின் சார்பாகவும், வர்த்தகர்களில் கடையடைக்கவேண்டு மென்பவர்களுடையவும், கடையடைக்கவேண்டாமென்ற கோஷ்டியினருடையவும் அபிப்பிராயங்களை நாங்கள் ஜாக்கிரதையாக கவனித்து ஆலோசித்துப் பார்த்தோம். பொது ஜனங்களுக்கோ அல்லது வியாபாரிகளுக்கோ அசௌகர்யமில்லாதபடி ஒவ்வொரு இங்கிலீஷ் மாத முதல் சனிக்கிழமையும், மூன்றுவது சனிக்கிழமையும் பிற்பகல் ஒரு மணியிலிருந்து மறுநாள் காலை 7 மணிவரை கடைகளை யடைத்து விடுமுறை யளிப்பது உசிதமென்று நாங்கள் முடிவு செய்கிறோம். இந்தமுடிவை நவம்பர் மாதம் முதற்கொண்டே அமுலுக்குக் கொண்டுவரவேண்டுமென்றும் நாங்கள் தீர்மானிக்கிறோம்.

காபி சாப்பாடு ஹோட்டல்காரர்கள் தங்களுக்குள் ஒரு முறையை ஏற்படுத்திக் கொண்டு ஒவ்வொரு மாதமும் இன்னின்னார் திறந்து வைப்பதென்று ஏற்பாடு செய்து கொள்ளலாம்.

நாங்கள் இந்த முடிவை சம்பந்தப்பட்டவர்களுக்கும் போலீஸ் டிப்டி சூப்ரெண்டு, இராமனுதபுரம் ஜில்லா சூப்ரெண்டு மதுரை, தேவகோட்டை சப் கலெக்டர் அவர்கள் ஆகியோருக்கும்அனுப்பியுள்ளோம்.

பஞ்சாயத்தார்களின் ஷை தீர்மானப்படி நவம்பர் 4உ, முதல் சனிக்கிழமை யாதலால் அன்று பிற்பகல் 1 மணி முதல் காரைக்குடி வர்த்தகர்கள் பெரும்பாலும் கடைகளை அடைத்தனர்.

ஆனால் சுமார் 30 கடைகள்வரை அடைக்கப்படாமல் திறந்துவைக்கப்பட்டிருந்தன. அடுத்த கடையடைப்பு தினத்திற்குள் இக்கடைகாரர்களும் அடைக்கும்படியாக பஞ்சாயத்தார் ஏற்பாடு செய்யவேண்டியது அவசியமாகும் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

### விஜிலன்ஸ் கமிட்டிக் கூட்டம்

9—11—37 மாலை 5 மணிக்கு காரைக்குடி விஜிலன்ஸ் அசோஸியேஷனின் நிர்வாக சபைக் கூட்டம் முனிஸிபல் ஆபீஸ் மேன்மாடியில் நடைபெற்றது.

பின் கண்டவர்கள் அங்கத்தினர்களாக "கோவாப்ட்" செய்யப்பட்டார்கள். ஸ்ரீமான்கள் வி. பரமசிவம், எஸ். ராமையா, எஸ். லெட்சுமணன், டாக்டர் வி. எஸ். மணி, ஸ்ரீமதிகள் சுப. திருநெல்லையாச்சி, பி. சௌந்தரம், மிஸஸ் பொன்னப்பா, மெ. ராம. மெ. நாச்சம்மை ஆச்சி, ஸ்ரீமான்கள் கரு. சொ. பழனியப்ப செட்டியார் குப. சிவ. பழனியப்ப செட்டியார், சி. பி. தேசிகாச்சாரியார் (இன்கம்டாக்ஸ் ஆபீஸர்) நா. காட்டுவாவா ராவுத்தர்.

நகரின் பல பாகங்களிலும் பொதுக் கூட்டங்கள் நடத்த திருவாளர்கள் பழ. நாச்சியப்பா. வி. பரமசிவன் ஆகிய இருவரும் நியமிக்கப்பட்டார்கள்.

# காரைக்குடி ஜில்லா இரண்டாவது அரசியல் மகாநாடு

## கொடியேற்றுவதற்கு ஜில்லா அதிகாரிகளை அழைக்க பிரேரணை

பள்ளத்தூர் நவ 5

நேற்று மாலை 4-30 மணிக்கு காரைக்குடி ஜில்லா அரசியல் மகாநாட்டின் வரவேற்புக்கழக அங்கத்தினர் கூட்டம் பள்ளத்தூரில் திரு. சிதம்பரம் செட்டியார் பங்களாவில் நடைபெற்றது. வரவேற்புக் கழகத் தலைவியார் ஸ்ரீமதி நீலவதி ராமசுப்பிரமணியம் வாராததால் டாக்டர் சுப்பிரமணியம் அவர்கள் தலைமைவகித்தார்கள். பின்கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன:—

வரவேற்புக் கழக அங்கத்தினர் திரு. காளிமுத்து ஊரில் இல்லாததால் திரு. நா. வீர. நாகப்ப செட்டியார் மேற்படியார் ஸ்தானத்திற்குத் தேர்ந்தெடுக்கப் பட்டார்.

உபசாரக் கமிட்டிக்கு கீழ்க்கண்ட அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்:—திரு. ராம. மு. லெ. அருணசலம், டாக்டர் எஸ். சுப்பிரமணியர், வ. கு பெ. சொக்கலிங்க அம்பலம், திரு. உ. அ. உ. க. சித. சிதம்பரம் செட்டியார், அ. ராம. அள. ராமசாமி செட்டியார், திரு. சி. ராம. ப. ராம. பழனியப்ப செட்டியார்.

வரவேற்புக் கமிட்டிக் காரியதரிசி ஸ்ரீமான் வெ. வீர. நா. அரு. நாகப்பா அவர்கள் காரியதரிசி பதவியை ராஜீநாமாச் செய்த விட்டபடியால் அவருடைய ஸ்தானத்திற்கு திரு. உ. அ. உ. க. சிதம்பரம் செட்டியாரவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்.

வரவேற்புக்கழக அங்கத்தினர் கட்டணத்தைக் குறைந்த அளவு 2 ரூ என்று நிர்ணயிக்கப் பட்டது.

வரவேற்புக் கழகத் தலைவரின் பிரசங்கம் கமிட்டியாரால் பரிசீலனை செய்யப்பட்டு அவர்களுடைய அங்கீகாரம் பெற்ற பிறகே வாசிக்கப்பட வேண்டுமென்று தீர்மானிக்கப் பட்டது.

கொடியேற்று விழாவிற்கு முன் நடந்த வரவேற்புக் கழகக் கூட்டத்தில் பிரேரேபிக்கப்பட்ட மந்திரிகள் வர இயலாவிட்டால் ஜில்லா கலெக்டரையாவது ஜில்லா போலீஸ் சூப்ரெண்டையாவது அழைப்பதென்று தீர்மானிக்கப் பட்டது.

# ஐக்கியமாகாணத் துக்கு ஜே!

ஐக்கிய மாகாணத்தில் இவ்வருஷம் 9 லட்சம் காங்கிரஸ் அங்கத்தினர்கள் சேர்ந்திருக்கின்றனரென்று ஒரு செய்தி கூறுகிறது. இந்தியாவிலேயே ஐக்கிய மாகாணம். தான் அதிக அங்கத்தினர்களைச் சேர்த்திருக்கிறது. ஆகவே ஐக்கிய மாகாணத்துக்கு ஜே! கூறுவோமாக.

## காரைக்குடி ரயில்வே ஸ்டேஷன்

காரைக்குடி முனிஸிபல் கமிஷனர் திரு. டி. புருஷோத்தம் அவர்களால் தென்னிந்திய ரயில்வே கம்பெனி ஏஜண்டு அவர்களுக்குப் பின் வருமாறு ஒரு கடிதம் 2—11—37 உ யன்று அனுப்பப்பட்டிருக்கிறது:—

ரயில்வே மேப்பில் மானமதுரை திருச்சினுப்பள்ளி மெயின் லைனில்செட்டிநாடு ரயில்வே ஸ்டேஷனின் பெயர் மட்டுமே குறிப்பிடப் பட்டிருக்கிறது காரைக்குடி ஸ்டேஷனைப் பற்றிய குறிப்பே காணப்படவில்லை. செட்டிநாடு ஒருமைனர் ஸ்டேஷனேயாகும். காரைக்குடி பல விதத்திலும் இந்த செக்ஷனில் முக்கியமான இடமாக இருக்கிறது. ஆகவே ரயில்வே மேப்புகளில் காரைக்குடி ஸ்டேஷனின் பெயரையும் சேர்க்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

## மத்ய கல்வி ஆலோசனை போர்டு

### மகாத்மாவின் ஆரம்பக் கல்வித் திட்டம் கவனிக்கப்படலாம்

புது டில்லி. நவ. 6—

இந்திய சர்க்கார் மத்ய கல்வி ஆலோசனை போர்ட் வருகிற ஜனவரி மாதம் கூடும் என்று தெரிகிறது.

போர்டின் தனி அங்கத்தினர்கள், மகாத்மாவின் ஆரம்ப கல்வித் திட்டத்தை போர்டின் ஆலோசனைக்குக் கொண்டு வருவது என்று தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது.



# கார்ப்பரேஷன் ஊழல் விசாரணை முடிவு

## 6 கவுன்ஸிலர்கள் மீது நடவடிக்கை

சென்னைக் கார்ப்பரேஷன் ஊழல்களைப் பற்றி விசாரணை செய்த கமிட்டியின் யதாஸ்தை மாகாண காங்கிரஸ் காரியக் கமிட்டியார் பரிசீலனை செய்து கமிட்டியின் சிபார்சுகளை ஒரு மனதாக ஒப்புக்கொண்டிருக்கின்றனர். ஷை விசாரணைக் கமிட்டியார் பின் கண்ட கார்ப்பரேஷன் அங்கத்தினர்கள்மீது பின்கண்டவாறு நடவடிக்கை எடுத்துக்கொள்ள முடிவு செய்திருக்கிறார்கள்:—

ஸ்ரீமான் தாமோதர நாயுடு அவர்களைப் பற்றி எங்களுக்குக் கிடைத்த சாக்ஷியங்களிலிருந்து அவர் தம் செல்வாக்கை துர் விநியோகப்படுத்தி யிருக்கிறார் என்று நாங்கள் தெரிந்து கொண்டோம். இவர் மேல் எங்களுக்குக் கிடைத்த சாக்ஷியங்களைக் கொண்டு இவர் காங்கிரஸ் பேரால் கார்ப்பொரேஷனிலோ, வேறு இதர ஸ்தாபனங்களிலோ அங்கம் வகிக்க லாயக்கற்றவர் என்று அபிப்பிராயப்படுகிறோம். ஆகையினால் இவர் தனது கார்ப்பொரேஷன் அங்கத்தினர் ஸ்தானத்தை ராஜினாமா செய்து விடவேண்டும். மேலும் இவரை கார்ப்பொரேஷனுக்கோ சட்டசபைக்கோ வேறு காங்கிரஸ் கமிட்டிகளிலோ அங்கம் வகிக்க இடம் தரக்கூடாதென்று ஆந்திரா காங்கிரஸ் கமிட்டித் தலைவருக்குச் சிபார்சு செய்கிறது.

ஸ்ரீமான் பாலசுப்பிரமணியம் புதிதாக காங்கிரஸில் சேர்ந்து கார்ப்பொரேஷன் அங்கத்தினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தும் இவரும் தன் அங்கத்தினர் பதவியைக் கொண்டும் காங்கிரஸ் கட்சியில் பதவியைக் கொண்டும் தன் சுயநலத்தைக் கருதியே காரியங்கள் செய்துவந்ததாக சம்பந்தக்க சாக்ஷியங்கள் இருப்பதால் இவர் தனது கார்ப்பொரேஷன் அங்கத்தினர் பதவியை உடனே ராஜினாமாச் செய்துவிடவேண்டும். அவர் மறுபடியும் எந்த முனிசிபல் தேர்தலுக்கோ காங்கிரஸ் கமிட்டிகளுக்கோ தெரிந்தெடுக்கக்கூடாதென அபிப்பிராயப் படுகிறோம்.

ஸ்ரீமான்கள் டி. ஜீ. லக்ஷ்மணஸ்வாமி முதலியாரைப்பற்றியும் பு ம. ஆதிகேசவலு நாயக்கரைப்பற்றியும் எங்களுக்குக் கிடைத்த சாட்சியங்களிலிருந்து அவர்கள் ஸ்டாண்டிங் கமிட்டிகளில் வகித்துவரும் அங்கத்தினர் பதவிகளை ராஜினாமாச்செய்துவிட வேண்டுமென்று அபிப்பிராயப்படுகிறோம். இனிமேலும்கூட அவர்கள் கார்ப்பொரேஷன் அங்கத்தினராக இருக்கும்வரையில் கார்ப்பொரேஷன் ஸ்டாண்டிங் கமிட்டிகளில் அங்கம் வகிக்கவிடக்கூடாது.

காங்கிரஸ் கவுன்சிலர்களைப்பற்றி ஒரு வார்த்தை கூற விரும்புகிறோம். எந்தக் கவுன்சிலரும் தான் தேர்ந்தெடுக்கப்பட்டவுடன் வரி செலுத்துவோரின் நன்மைக்குப் பாடுபடவேண்டுமே ஒழிய எவரிடத்திலும் தாங்கள் கொண்ட வெறுப்புகளைக் காட்டும் முறையில் நடந்து கொள்ளவோ அல்லது தொந்தரவு கொடுக்கவோ கூடாது என்று அபிப்பிராயப் படுகிறோம். இதன்படியே இவர்கள் நடந்துவர வேண்டுமென்று எச்சரிக்கிறோம்.

ஸ்ரீமான்கள் என். ராஜகோபாலன், கோபாலமேனன், சாமி வெங்கடாசலம் செட்டியார் முதலியவர்கள் கதர் கட்டாமல் இருந்து வருகிறார்கள் என்ற ஆட்சேபனைகளை விசாரித்தோம்.

இம்மூவரும் எப்பொழுதும் கதர் கட்ட வேண்டும் என்றும், அப்படிக் கட்டத்தவறினால் இவர்கள் மீது காங்கிரஸ் கட்சி தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்றும் காங்கிரஸ் கட்சியைக் கேட்டுக் கொள்கிறோம்.

தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியார் ஸ்ரீமான் சக்கரை செட்டியார் மீது ஒழுங்கு மீறியதற்கு நடவடிக்கை எடுத்துக் கொண்டு காங்கிரஸை விட்டு விலக்கியிருந்தும் காங்கிரஸ் முனிசிபல் கட்சியானது இவரை ஆல்டர்மனுகத் தேர்ந்தெடுத்தது இவர்களது கேவலமான மனப்பான்மையைக் காட்டுகிறது. காங்கிரஸ் கட்சித் தலைவர் கட்சியை நடத்திவந்த முறை கட்சிக் கட்டுப்பாட்டை நிலை நிறுத்தும்படியான தோரணையில் இல்லை யென்று அபிப்பிராயப்படுகிறோம்.

கார்ப்பொரேஷன் உத்தியோகஸ்தர் நியமன விஷயங்களில் பல காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்கள் தனி சிரத்தை காட்டி வருவதும் அதற்காக நடந்துகொண்ட முறைகளையும் கண்டிக்காமல் இருக்க முடியாது.

## பர்மாவிலுள்ள சந்தாதார்கட்கு

பர்மாப் பிரிவினையின் பயனக பத்திரிகைக்குத் தபாற்கட்டணம் ஒன்றுக்கு மூன்ருக ஏற்றப்பட்டிருக்கிறது. ஆதலால் ஏப்ரல் 1உ யிலிருந்து சந்தா ரூ. 7. ஆக உயர்த்தப்பட்டிருக்கிறது.

மானேஜர்,
குமரன் ஆபீஸ்,
காரைக்குடி.


# குமரன்

காரைக்குடி
ஈஸ்வர-ஸு ஐப்பசி-மீ 26உ


## ரப்பர் விலை வீழ்ச்சி

ரப்பர் விலை வர வர விழுந்து வருகிறது. இப்போது ஆறேமுக்கால் பென்ஸுக்கு வந்திருப்பது கவலைக்கிடமானதாகும். இந்த விலைப்படி பார்த்தால் பிக்கல் ஒன்றுக்கு சுமார் முப்பது வெள்ளியாகும். இந்த விலையானது மிகவும் ஏமாற்றத்தை இப்போது தரக்கூடியதென்பதில் சந்தேகமில்லை. முழுமையும் வீழ்ந்து கிடந்த காலத்தில் பட்ட கஷ்டம் பெரிதுதான். ஆனால் அதிலிருந்து எழுந்து ஏறிவந்தது. 50 விலையும் அதற்குமேலும் வந்தது. சென்ற சில நாளாக வரவரப் பெரும்பாலும் ஏறி வந்துகொண்டிருந்த ரப்பர் விலை திடீரென்று இறங்க ஆரம்பித்திருக்கிறது. மலாயா சம்பந்தமுடையவர்கள் பெருங் கஷ்டப்பட்டு ஒருவாறு தெளிவடைந்தனர். இப் பகுதியில் இதன் பயனகப் பணக் கஷ்டம் சிறிது ஒழிந்ததென்னலாம். பணக் கஷ்டம் ஒழிய ஆரம்பிக்கவே செலவினம் தலையெடுத்துவிட்டது. அடங்கியிருந்த விசேஷங்களின் ஆர்ப்பாட்டம் பெருகிவளர்ந்து சென்றுகொண்டிருக்கிறது. ஆனால் பண நிலைமை வருவாய் குறைய ஆரம்பித்ததால் கஷ்டம் அதிகப்படுமென்று கூற வேண்டியதில்லையன்றே?

இப்போதைய நிலைமையில் 30 விலை பெரும் விழுக்காடல்லவாயினும் ஒவ்வொரு பீக்கலுக்கும் கிடைக்கிற நிகாலாபத்தில் 20 வெள்ளி குறைந்துபோகிறதென்பது கவனிக்கத் தக்கதாகும். ஏன் குறைகிறதென்று காரணங் கேட்கவேண்டியதில்லை. லண்டன் லிவர்பூலிலுள்ள ஸ்டாக் ஒன்றும் பிரமாதமாக ஏறிப்போய்விடவில்லை. ரப்பர் ஏராளமாகத் தேவைக்கு மேல் திடீரென்று உற்பத்தியாய் விடவுமில்லை. லண்டன் அமெரிக்க வியாபாரிகள் கையில் இதன் விசைமுனை இருக்கிறது. அவர்கள் எதை வேண்டுமாயினும் செய்யலாம். மார்க்கெட் நிலைமையை உண்டுபண்ணும் சக்தி அவர்கள் கையிலிருக்கிறது. அவர்கள் சொல்வதுதான் விலை. ஏற்றினாலும் ஏற்றினார்கள்; வீழ்த்தினாலும் வீழ்த்தினார்கள். கேட்பார் யார்? செய்ய மற்றவர் கையில் என்ன இருக்கிறது.? தந்தியை எதிர்பார்த்துக்கொண்டிருக்க வேண்டியதுதான்.

மலாயா கொண்டுவிலை ஒருபுறமிருக்க, இங்கே ரப்பர் ஷேர்களில் ஏராளமான முதலைப் போட்டிருப்பவர்கள் வேறே இருக்கின்றனர். இந்த ரப்பர் விலை வீழ்ச்சியானது பெரிதும் பாதகந் தருவதாக இருக்கிறது. ஆனால் இந்த விலை வீழ்ச்சியானது மாற்றமடையக் கூடுமென்று நம்பலாம். ரப்பர் ஒரு உபயோகமான பொருளாகி நிற்பதாலும் கண்ட்ரோலுக்குட்படுவதாலும் நம்பிக்கைக்கு இடமுண்டு. இன்னும் கீழே போகாமல் இவ்வளவிலாவது நின்ருல்தான் மலாயாவில் தொழில் உள்ளவர்களின் நிலைமை ஒரு நிதானத்திலிருக்க முடியுமென்று கூறவேண்டியதில்லை.

ஈயம் செம்பு முதலிய உலோகப் பொருள்களின் விலையும் இறங்கியிருக்கிறது. மலாயாவை ஈயவிலை வீழ்ச்சி மிகவும் தாக்கக்கூடியதாகும். ஏககாலத்தில் ரப்பரும் ஈயமும் வீழ்ச்சியுறுமானல் மலாய்நாட்டு நிலைமை மக்களின் கவலைக்கிடமாகி நிற்குமென்பதிற் சந்தேகமில்லை. இந்த விலை இறக்கம் கூடிய விரைவில் மேலேற வேண்டுவது அவசியமாகும். அப்படியானல்தான் இங்கே நடக்கிற செலவுக்கும் சிறப்புக்கும் தாராளமாக இடமுண்டு.

---

## விளக்கிட்ட பிறகு கல்யாணங்கள்

கார்த்திகை மாதம் கார்த்திகை விளக்கிட்டபிறகு அத்தமாதத்தில் கல்யாணம் முதலிய காரியங்களைச் செய்வதில்லையென்பது நகரத்தார் சமூகத்தில் ஒருசம்பிரதாயம். இந்தசம்பிரதாயம் இவ்வாண்டில் கைவிடப்படுமென்று தெரிகிறது. கார்த்திகை மாதம் மூன்றாந் தேதி திருக் கார்த்திகை வருகிறது. அதன் பிறகு ஏராளமான கல்யாணங்கள் நடைபெற ஏற்பாடாகியிருப்பதாகத் தெரிகிறது. இதைத் தவிர தை மாதத்தில் "வெள்ளி பாடு" என்று சோதிடர்கள் கூறுகிறார்கள். இப்படிப்பட்ட காலங்களில் கல்யாணம் முதலிய விசேடங்களைச் செய்கிறதில்லை. இந்த ஆண்டில் இதை லட்சியம் செய்யாமல் கல்யாணங்களைச் செய்ய ஏற்பாடுகள் நடக்கின்றன. (ஒரு நிருபர்)

---

## காரைக்குடி முனிஸிபல் கூட்டம்

1937-ம் வருஷம் நவம்பர் 12உ வெள்ளிக்கிழமை மாலை 3 மணிக்கு காரைக்குடி முனிஸிபாலிடியின் சாதாரணக் கூட்டமொன்று முனிசிபல் ஆபீசில் நடைபெறும்.

---

## பங்களூர் அமளிபற்றி காமன்ஸில் கேள்வி
### சுடுவதைத் தவிர போலீஸாருக்கு வேறு வழியில்லையாம்

லண்டன், நவ. 8.

இன்று காமன்ஸ் சபையில் மிஸ்டர் கலாச்சாரின் கேள்விக்கு மிஸ்டர் ஸ்டான்லி பதிலளிக்கையில் சென்ற அக்டோபர் 25-ந் தேதி பங்களூரில் நடந்த மாணவர் கூட்டம் சம்பந்தமான நிகழ்ச்சிகளை எடுத்துரைத்தார்.

கூட்டத்தினர் அமைதியாகக் கலைந்து செல்லுமாறு செய்ய அதிகாரிகள் சாத்வீக முறையில் தங்களாலான வரை முயன்றதாகத் தெரிகிறதென்றும் இறுதியில் வேறு வழியில்லாமல் தற்காப்பை முன்னிட்டே போலீஸார் துப்பாக்கிப் பிரயோகம் செய்தனரென்றும் கூட்டத்தைக் கலைக்க வேறு வழியேதேனும் இருந்திருக்குமாயின் போலீஸார் மகிழ்ச்சியுடன் அவ்வழியைப் பின்பற்றியிருப்பார்கள் என்றும் மிஸ்டர் ஸ்டான்லி கூறினர்.

---

## ஸ்தல ஸ்தாபன இடைத் தேர்தல்கள்
### ஒத்திவைக்கப்படலாம்

சென்னை, நவ 8—

ஸ்தல ஸ்தாபனங்களிலும் முனிஸிபாலிடிகளிலும் ஏற்படும் இடைத் தேர்தல்களை இப்பொழுது நடத்தவேண்டாமென்றும், திருத்தியமைக்கப்பட்ட வாக்காளர் தொகுதியின்படி ஜனவரி மாதத்தில் நடைபெறவிருக்கும் தேர்தல்களுடன் நடத்தலாமென்றும் ஸ்தல நிர்வாக மந்திரி முடிவு செய்திருப்பதாகத் தெரிகிறது.

---

## 'கார்ப்பரேஷனைக் கலைத்து விடுவோம்'
### ஸ்தலஸ்தாபன மந்திரி எச்சரிக்கை

நவம்பர் 8உ மாலை சென்னை மேயர் பதவியிலிருந்து விலகும் திரு. K. ஸ்ரீராமலு நாயுடுவுக்கு திரு. சத்தியமூர்த்தி விக்டோரியா பப்ளிக் ஹாலில் ஒரு விருந்து நடத்தினர். அப்பொழுது ஸ்தல ஸ்தாபன மந்திரி கனம் கோபால்ரெட்டி யவர்கள் சென்னைக் கார்ப்பரேஷன் ஊழல் பற்றிப்பேசியது வருமாறு:

"இனி சென்னை கார்ப்பரேஷனில் யாதொரு ஊழலுமிருக்காதென்று ஸ்ரீ சத்யமூர்த்தி எனக்கு வாக்குறுதி கொடுத்திருப்பதாக எடுத்துக் கொள்கிறேன்.

அவரும், அவருடைய சகாக்களும் இந்த வாக்குறுதியை நிறைவேற்றி வைக்காவிடில், நான் தீவிர நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டியிருக்கும். ஏனெனில் நமது மாகாணத்தில் பல பஞ்சாயத்து போர்டுகளும் ஸ்தல ஸ்தாபனங்களும் பல காரணங்களையொட்டி மூடப்படுவது உங்களுக்குத் தெரியும். சென்னை கார்ப்பரேஷனிலும் லஞ்சம், வேண்டியவர்களுக்கு உத்தியோகம் வாங்கிக்கொடுப்பது இவைகளிருந்தால் ஏன் இதை மூடிவிட்டு, விசேஷ அதிகாரியை நியமிக்கக்கூடாது?

"சர்க்கார் இப்படிச் செய்யக்கூடாதென்பதற்கு யாதொரு காரணமுமில்லை. நான் ஏதோ பயமுறுத்துகிறேன் என்று எண்ணவேண்டாம். நீங்களும் நானும் லஞ்சப் பழக்கத்தை ஒழிக்க கங்கணம்கட்டி யிருக்கிறேமென்பதை உணரவேண்டும். இந்த லக்ஷியத்தை மறக்காமல், நமது ஸ்தலஸ்தாபனங்கள் மாசற்றதாயிருக்க ஒவ்வொருவரும் தன்மீதுள்ள பொறுப்பை யுணர்ந்து, அவர்களாலியன்றவரை தேச சேவை செய்யவேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறேன்.

---

## திருப்பத்தூரில் சுயமரியாதை மகாநாடு

திருப்பத்தூர் தாலுகா இரண்டாவது சுயமரியாதை மகாநாடு 14-11-37 ஞாயிற்றுக் கிழமையன்று திருப்பத்தூரில் நடைபெறும். திரு. எஸ். சம்பந்தம் தலைமைவகிப்பார். திருச்சி திரு. டி. பி. வேதாசலம் திறந்துவைப்பார். சிவகங்கை ஆர் கிருஷ்ணம்மாள் கொடியேற்றுவார்.

---

## புதுவயல் ஸ்ரீ சரஸ்வதி சங்கம்

நமது சங்கத்தின் 16வது ஆண்டு 6-வது மாதக் கூட்டம் நாளது ஐப்பசித் திங்கள் 23ம் நாள் (8-11-37) திங்கட்கிழமை மாலை 5 மணிக்கு எ. பெரி. அவர்கள் பங்களாவில் திரு. T. N. நடேசரூவ் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் ச. வி. மாணவ மாணவிகளால் பாட்டு பேச்சு நடிப்பு முதலியனவும் திரு. காசிநாதன் அவர்கள் சங்கம் என்பது பற்றியும் திரு. ஆ. முத்துசிவம் அவர்கள் (பீ. ஏ. ஹானர்ஸ்) கவித்திறம் பற்றியும் சொற்பொழிவு நிகழ்த்திய பின் தலைவரவர்கள் முடிப்புரை கூற வந்தன வாழ்த்துடன் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

---

## 200 பேர் பலி
### எக்ஸ்பிரஸ்மீது ஜப்பானிய குண்டுகள்

நான்கிங், நவ. 8உ

டீண்ட்ஸின்—நான்கிங் எக்ஸ்பிரஸ் ரயில் வண்டித் தொடர் மீது 6 ஜப்பானிய விமானங்கள் குண்டுகளை வீசின. 10 வண்டிகளில் 7 நாசமாயின. காயமடைந்தவர்களும் உயிரிழந்தவர்களும் 200 பேர்.

---

## புதுக்கோட்டை சட்டசபை
### மதுவிலக்குப் பிரேரணை

நவம்பர் 7-ந்தேதி நடந்த புதுக்கோட்டை சட்டசபையின் கூட்டத்தில் திரு. V. ஷண்முகஞ் செட்டியாரவர்கள் புதுக்கோட்டை முனிசிபல் ஏரியாவில் மதுவிலக்குத் திட்டத்தை பரீக்ஷார்த்தமாக அமுலுக்குக் கொண்டுவர விரும்புவதாகக் கூறினர். ஆனல் தலைவர் ஓட்டுகள் இதற்கு அனுகூலமாக இல்லை யென்று தெரிவித்துவிட்டார்.

---

## சென்னை மேயர்
### திரு சிவஷண்முகம் தேர்ந்தெடுக்கப்பட்டார்

சென்னை, நவம்பர். 9.

ஆதித்திராவிட மெம்பரான திரு. ஜே. சிவஷண்முகம் அவர்கள் சென்னை கார்ப்பரேஷன் மேயராக ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்ருர். சென்னைக் கார்ப்பரேஷனுக்கு ஆதித்திராவிட மெம்பர் மேயராக வருவது இதுவே முதல் தடவையாகும்.

டிப்டிமேயர் ஸ்தானத்திற்கு திரு. டாக்டர் யூ. கிருஷ்ண ராவ் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

---

## கண்டவராயன் பட்டி

ஜவகர் இளைஞர் சங்கத்திறப்புவிழா இவ்வூர் இளைஞர்களால் மேற்கண்ட பெயருள்ள சங்கம் திருப்பத்தூர் தேசபக்தர் ஸ்ரீமான் K. கிட்டுவையர் அவர்கள் தலைமையில் மாலை ஐந்துமணிக்கு நடைபெற்றது. இவ்வூர் கிராமக் காங்கிரஸ் கமிட்டி உபதலைவர் ஸ்ரீமான் மு. ப. நா. அருணசலம் அவர்கள் சங்கத்தைத் திறந்துவைத்தார்கள். ஸ்ரீமான்களான முத்துசாமி அவர்கள், M. வள்ளியப்பா அவர்கள், S. ஞானபண்டிதன் அவர்கள், V. குமரப்பா அவர்கள், V, S: பழனியப்பா அவர்கள், சங்கத்தின் நோக்கங்களைப்பற்றியும், தேசவிடுதலைக்குப் போராட வேண்டுமென்றும், இளைஞர்கள் ஒற்றுமையாக இருக்கவேண்டு மென்றும் சொற்பொழிவு ஆற்றினர்கள். தலைவர் முடிவுரைக்குப் பின் கூட்டம் இரவு எட்டு மணிக்கு இனிது நிறைவெய்தியது.

சங்கத்திற்கு கீழ்க்கண்ட நிருவாகிகள் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள்:—

தலைவர் கு. ம. சிங்காரம், காரியதரிசி அண. சிங்காரம், பொக்கிஷதார் சே. மாணிக்கம்.

---

## 'தேசத்தில் 2 கக்ஷிதான்'
### முஸ்லிம் தலைவர்கள் கர்ஜனை

லாகூர், நவ. 8—

'நாங்கள் முஸ்லிம் லீக்கில் சேர முடியாது. ஆயினும் இதை நசுக்க நாங்கள் விரும்புகிறேம். ஏனெனில் இது பிற்போக்காளர் கக்ஷி. நம்மை சுதந்திர வழியில் அழைத்துச் செல்வதற்குப் பதிலாக இக்கக்ஷி (லீக்) நம்மை அடிமையாக்கவே அழைத்துச் செல்கிறது" என்று மௌல்வி மஜாரலி அஜார் எம். எல். ஏ. கூறினர்.

இவர் பிரபல அஹ்ரார் தலைவர். நேற்று மாலை இங்கு பிரும்மாண்டமான பொதுக் கூட்டம் நடந்தது. அப்போது பேசுகையில் மேற்சொன்ன விதமாகக் கூறினர்.

---

## செட்டியார் இளைஞர் சங்கம் வேலூர்

இச் சங்கத்தின் வாராந்திரக் கூட்டம் 8—11—37 மாலை 4 மணிக்கு ஸ்ரீமான் எஸ். எம். ஷண்முகஞ் செட்டியார் தலைமையில் நடைபெற்றது. திருவாளர்களான எஸ். ஸ்ரீநிவாசகன், எஸ். எம். கண்ணப்பன், எல். சொக்கலிங்கம், எஸ். எம். ஆதினமிளகி முதலியோர்கள் அழகாக விரிவுரையாற்றினர்கள். பின்னர் தலைவரவர்கள் முடிவுரைக்குப் பின் 6-30 மணிக்கு கூட்டம் இனிது நிறைவெய்தியதென உபகாரியதரிசி தெரிவிக்கிருர்.



## அபிஸீனிய மன்னர் வறுமை
### சாமான்களை விற்கிருராம்!

பாரிஸ், நவ, 7—

அபிஸீனியச் சக்கரவர்த்தியாகிய ஹெய்லிஸெலாஸி தரித்திரம் காரணமாக மிகவும் கஷ்டப்படுகிறரென்று அவருடைய வழக்கறிஞர் பாரிஸ் நீதி சபையில் தெரிவித்தார். அடிஸ் அபாபா ஜிபூதி ரயில்வேயில் பிரெஞ்சு அபிஸீனியா உப்பு உற்பத்திக் கம்பெனியிலும் தமக்குரிய பங்குப்பணத்தைக் கொடுக்கவேண்டுமென்று நீகஸ்மேற் கூறிய கம்பெனியின் அதிகாரிகளைக் கேட்டார்.

"ஆதரவற்றிருக்கும் என்னுடைய தேசமக்களுக்கு கஷ்ட நிவர்த்தியளிக்கும் பொருட்டு நான் அடிஸ் அபாபாவிலிருந்து கொண்டுவந்த என்னுடைய சொந்த சாமான்களிற் சிலவற்றை விற்க வேண்டியதாயிற்று" என்று நீகஸ் பத்திரிகை நிருபர்களிடம் கூறினர்.

---

## ஸ்ரீ பாஷ்யத்திற்கு தண்டனை
### 18 மாதக் காவல் தண்டனை

பெங்களூர், நவ. 8—

மைசூர் காங்கிரஸ் போர்டு சர்வாதிகாரியான ஸ்ரீமான் கே. டி. பாஷ்யத்திற்கு நகர மாஜிஸ்டிரேட் இன்று 18 மாதக் கடுங்காவல் தண்டனையும் ரூ. 1000 அபராதமும் அபராதம் செலுத்தத் தவறினல் மற்றும் மூன்று மாதக் காவல் தண்டனையும் இ. பி. கோ. 124-வது பிரிவுப்படி விதித்தார். ராஜத்துவேஷக் குற்றத்திற்காக இவர் சென்ற மாதம் 15-ந் தேதி நடு நிசியில் கைது செய்யப்பட்டு மறு தினம் மாஜிஸ்டிரேட் முன் ஆஜர் செய்யப்பட்டார்.

### ஜாமீன்கொடுக்க மறுப்பு

மைசூர் காங்கிரஸ் போர்டு தலைவரான ஸ்ரீமான் ஸித்தலிங்கய்யாமீதும் மற்றும் இரண்டு காங்கிரஸ்காரர் மீதும் சி. பி. கோ. 108-வது பிரிவுப்படி நன்னடக்கை ஜாமீன் வழக்கு தொடரப்பட்டதில் அவர்கள் ஜாமீன் கொடுக்க வேண்டுமென்று உத்தரவிடப் பட்டது. இவர்கள் ஜாமீன்கூட மறுத்ததின் பேரில் இவர்கள் ஒரு வருஷம் அல்லது ஜாமீன் கட்டும் வரையில் சிறை செல்ல வேண்டுமென்று மாஜிஸ்டிரேட் உத்தரவிட்டார்.

---

## கொச்சியில், மதுவிலக்கு
### பெண்கள் மகாநாட்டில் பிரேரணை

நவம்பர் 6-உ எர்ணுகுளத்தில் நடைபெற்ற கொச்சி பெண்கள் மகாநாட்டில் ஸ்ரீமதி மாத்யூவால் மது விலக்குச்சட்டத்தை தைரியமாக நிறையேற்றிய சென்னை மந்திரி சபையைப் பாராட்டுவதாகவும், கொச்சி சமஸ்தானத்தில் கூடிய விரைவில் மதுவிலக்குச் சட்டத்தை நிறைவேற்றி வைக்குமாறு கொச்சி சர்க்காரைக் கேட்டுக்கொள்வதாகவும் ஒரு தீர்மானம் பிரேரேபிக்கப்பட்டு ஏகமனதாக நிறைவேறியது.

மற்றும் ஸ்ரீமதி விஜயலட்சுமி பண்டிதர் மந்திரியாக நியமிக்கப் பட்டதைப் பாராட்டுவதாகவும், கொச்சியிலுள்ள எல்லா மாதர்கட்கும் பொதுத் தொகுதியில் ஓட்டுரிமை தரவேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

---

## தோழர் பாட்லிவாலா வழக்கு.
### எதிரி குற்றவாளியல்லவென்கின்றனர் அஸஸிகள்

நெல்லூர், நவ, 9—

அபேதவாதியான பாட்லிவாலா வழக்கின் ஆர்க்குமெண்டுகள் இன்று முடிவடைந்தன. எதிரி குற்றவாளியல்லவென்று அசெஸிகள் ஏகமனதாக அபிப்பிராயப்பட்டனர். தீர்ப்பு நவம்பர் 12உ கூறப்படும்.

---

## தென் இந்திய வர்த்தக சங்கம்

சென்னை, நவ. 8.

நகை வியாபாரிகளின் எடைகளை முத்திரை போடுவதும், சோதனை செய்வதும் திருப்திகரமாயில்லாததால், இது விஷயமாக பரிசீலனை செய்ய வேண்டுமென தென் இந்திய வர்த்தக சங்கம் சென்னை சர்க்காருக்கு ஓர் கடிதமெழுதியிருக்கிறது.

---

## செட்டியாரின் வைரத்தோடு வாபீஸ்
### சுங்க இன்ஸ்பெக்டர் உத்தரவு

கடலூர், நவ. 6—

சென்ற ஆகஸ்டு மாதம் புதுக்கோட்டை ராமச்சந்திரபுரத்தைச் சேர்ந்த எ. ஆர். அண்ணமலை செட்டியார் சென்னைக்குச் சென்று திரும்புகையில் பல முக்கிய ஸ்தலங்களை தரிசித்துக்கொண்டு திருவண்ணமலையிலிருந்து திருப்பாபுலியூருக்கு 14-ந் தேதி காலை வந்து, அன்றே மோட்டார் பஸ் மூலம் புதுச்சேரிக்குச் சென்ருர். அவருடன் கூட அவர் மனைவி, பாட்டி, ஒரு வேலைக்காரன் ஆகியோரும் வந்தனர். 15-ந் தேதி புதுச்சேரியில் தங்கி பாபு அரவிந்தகோஷைப் பார்த்த பிற்பாடு மறுநாட் காலை மோட்டார் பஸ் மூலம் கடலூர் பழையபடி வந்து அன்று சாயங்கிரமே ரயில் மூலம் சிதம்பரத்திற்குப் புறப்பட்டார்.

வண்டி கூடலூர் ஸ்டேஷன் தாண்டியதும் திருப்பாப்புலியூர் ரயில்வேஸ்டேஷன் கஸ்டம்ஸ் சப் இன்ஸ்பெக்டரும் ஸ்ரீமான் பி. டி. ராகவாசாரி என்பவரும் ரயிலில் கூட வந்து அண்ணமலை செட்டியார் கையில் கட்டியிருந்த கை கெடியாரம் எங்கே வாங்கப்பட்டதென்றும், அவர் மனைவி காதிலணிந்திருந்த வைரத்தோடுகள் எங்கே செய்யப்பட்டதென்றும் விசாரித்து, பிறகு அவைகள் தீர்வை செலுத்தப்படாமல் சமீபத்திலிருக்கும் பிரெஞ்சு எல்லையிலிருந்து கொண்டுவரப்பட்டவையெனக்கூறி அடுத்த கேப்பர்குவாரி ஸ்டேஷனில் அவர்களை இறங்கும்படி சொல்லி, இறக்கி ஒரு மகஜர் தயாரித்து அதில் கையெழுத்திடச் சொல்லி கை கெடியாரத்தையும் வைரத் தோட்டையும் கைப்பற்றி அவைகளைத் திரும்பப் பெறவேண்டுமானல் அபராதத் தொகை செலுத்தவேண்டுமென்று கேட்க அண்ணமலை செட்டியார் மறுத்துவிட்டார். அண்ணமலைச் செட்டியார் சார்பாக வக்கீல் ஸ்ரீமான் பி. துரைசாமி அய்யங்கார் கண்டமங்கலம் கஸ்டம்ஸ் இன்ஸ்பெக்டரிடம் வைரத் தோடானது அவர் தகப்பனரால் சாமிநாத ஆசாரி என்ற ஒருவரிடமிருந்து வாங்கப்பட்ட வைரங்களால் பிறகு தோடாகச் செய்யப்பட்டு அண்ணமலை செட்டியார் விலாசத்தின்பொழுது அவர் மனைவிக்கு 8—2—1926ல் கொடுக்கப்பட்டதென்றும், இவ் விவரங்களெல்லாம் அவர் தகப்பனர் ஜீவாகச் செலவுகளுக்கென்று வைத்திருந்த கணக்குகளிருப்பதாகவும், சமீபகாலத்தில் வைரத் தோட்டின் கீழ்பாகம் புதுப்பிக்கப்பட்டதென்று கூறி, கணக்குகளையும் ஆஜர் செய்தார்.

அண்ணமலை செட்டியார் கையில் அணிந்திருந்த கை கெடியாரமானது சிங்கப்பூரில் சுமார் 6 வருஷங்களுக்கு முன்னல் வாங்கப்பட்டு, பிறகு அவர் பல முறை சிங்கப்பூர் போய் திரும்பி வந்த பொழுதும் அதை அவர் கட்டிக் கொண்டிருந்ததாயும் மனிதர்கள் அணிந்திருக்கும் பொருள்களுக்கு தீர்வை செலுத்த வேண்டுமென்பது விதியல்லவாகையால் அதற்குத் தீர்வை செலுத்தப்படவில்லை யென்றும் எடுத்துக்கூறினர்.

கஸ்டம்ஸ் இன்ஸ்பெக்டர் விசாரணைக்குப் பிறகு சுமார் ரூ 700 பெறுமான ஷை வைரத் தோட்டையும், கைக் கெடியாரத்தையும் திருப்பி, அண்ணமலைச் செட்டியாரிடமே கொடுத்துவிடும்படி உத்திரவு பிறப்பித்திருக்கிருர்.

---

## காங்கிரஸ் மெம்பர்கள் தொகை

அலகாபாத், நவ. 8—

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக் காரியாலயத்தில் விசாரித்ததில், இந்த வருஷம் இந்தியாவிலுள்ள எல்லா மாகாணங்களிலுமாகச் சேர்த்து, மொத்தம் 25 முதல் 30 லக்ஷம் வரையில் காங்கிரஸ் மெம்பர்கள் சேர்க்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

இது வரையில் எந்த வருஷத்திலும் இவ்வளவு மெம்பர்கள் சேர்ந்தது கிடையாது.

---

## வங்க மாகாணம்
### காங்கிரஸ் அங்கத்தினர் தொகை

கல்கத்தா, நவ 6.

வங்கத்தில் இவ்வருஷம் 2, 45, 000 பேர் காங்கிரஸ் அங்கத்தினராகச் சேர்ந்திருக்கின்றனர். சென்ற வருஷத் தொகை 85, 000 பேர்.

---

## R. G. ரங்கராமானுஜய்யங்கார் அவதூறு வழக்கு

சென்ற 19-4-37 காரைக்குடி முனிசிபல் கவுன்சிலில் முனிசிபல் கவுன்சிலராகிய ஜனப் S. P. N. M. முகம்மது இப்ராகிம் ராவுத்தரவர்கள் முனிஸிபல் கௌன்ஸிலராகிய திரு. ரெ.கோ. ரெங்கராமானுஜய்யங்காரவர்கள் கவுன்சிலர் ஸ்தானத்தை வகிக்க லாயக்கு இல்லாதவர் என்று தீர்மானம் கொண்டுவந்ததாகவும் அதை திரு. லெ. முத்துக்குமாரு அம்பலம் அவர்கள் ஆமோதித்ததாகவும் இன்னும் 12 கவுன்சிலர்கள் ஆதரித்ததாகவும் தேவகோட்டை. சப்கலக்டர் கோர்ட்டில் திரு. ரெங்கராமனுஜம் அவர்கள் கொடுத்த மானநஷ்ட வழக்கில் முதல் 2 கவுன்சிலர்கள் மாத்திரம் பைலில் எடுக்கப்பட்டு சிவகாசி சப்கலக்டர் கோர்ட்டுக்கு மாற்றப்பட்டு 8-11-37 விசாரணைக்கு வந்தது. எதிரிகள் சார்பில் முனிசிபல் ஆக்ட்ஸெக்ஷன் 51 பிரகாரம் அந்தவிதம் தீர்மானம் கொண்டுவர கவுன்சிலருக்கு பாத்தியதை உண்டு என்றும் அவ்விதம் செய்வதில் ஏதேனும் குற்றம் ஏற்பட்டிருந்த போதிலும் ஸெக்ஷன் 353 A. பிரகாரம் லோக்கல் கவர்ன்மெண்ட் உடைய அனுமதி இன்றி கம்பிளேண்ட் தாக்கல் செய்யமுடியாது என்றும் எதிர்வாதம் செய்யப்பட்டதை அங்கீகாரம் செய்து சிவகாசி சப்கலெக்டராகிய மிஸ்டர் P. T. ராமன் நாயர் I. C. S. அவர்கள் கேற்று ஸ்ரீவில்லி புத்தூர் முகாமில் முனிசிபல் கவுன்சிலர்களாகிய எதிரிகள் பேரில் நடவடிக்கை எடுக்க முடியாது என்று தீர்ப்புக் கூறினர்கள்.

---

## காந்திஜி—வங்காள கவர்னர் சந்திப்பு

கல்கத்தா, நவ. 9—

வழக்கம் போன்ற தமது முழங்கால் அளவுள்ள துண்டுடனும், உடம்பில் ஒரு சால்வையுடனும், தமது காரின் பானெட்டில் ஓங்கிப் பறக்கும் தேசீய ஜண்டாவுடனும் இன்று பிற்பகல் 1-30 மணிக்கு கல்கத்தாவிலுள்ள சரத்சந்திர போஸின் இல்லத்திலிருந்து காந்திஜி வங்காள கவர்னரைக் காண்பதற்காகப் புறப்பட்டார். கூட ஸ்ரீமான் தேசாயும், டாக்டர் சினிலால் சந்திரபோஸும் சென்றனர்.

பாரக்பூரில் கவர்னர் மாளிகைக்குச் செல்லும் வழியில் வெகுதூரம் ஜனக்கூட்டம் சேராமலிருக்க வேண்டி போலீஸ் பந்தோபஸ்து ஏற்படுத்தப்பட்டிருந்தது. போட்டார் பிரயாண சிரமத்தை காந்திஜி சமாளித்துக் கொண்டார். சரியாக 2-30 மணிக்கு 15 மைல் தூரத்திலுள் பாரக்பூர் வந்தார். கவர்னர் மாளிகையில் கவர்னரின் அந்தரங்கக் காரியதரிசியால் வரவேற்கப்பட்டு கவர்னர் அறைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். காந்திஜி புறப்படு முன்னர் பொக்கிஷ மெம்பர் ஸ்ரீமான் சர்க்கார் இங்குவந்து தமது மோட்டாரில் காந்திஜியுடன் கூடச் சென்ருர். ஸ்ரீமான் சுபாஷ்போஸ் காந்திஜி புறப்படும் பொழுது கூடவிருந்து காந்திஜிக்குச் சிரமமில்லாதவாறு மோட்டாரை மெதுவாக விடுமாறு டிரைவருக்கு அறிவித்தார். காந்திஜி மிகுந்த முகமலர்ச்சியுடன் காணப்பட்டார்.

---

## ஹிந்து மகா சபைத் தலைவர் காங்கிரஸில் சேர்ந்தார்

காசி நவ. 6—

ஹிந்து மகா சபைத் தலைவர் டாக்டர் ஜி. டி. ஹிங்கானி இன்று காங்கிரஸில் சேர்ந்தார். டாக்டர் பி. எஸ். மூஞ்சேயின் ஆலோசனையின் பேரில் அவர் அவ்வாறு காங்கிரஸ் ஆணையில் கை யெழுத்திட்டார். வகுப்பு ஸ்தாபனங்களால் இனிப் பயனில்லை; அதனல் தாம் ஹிந்து மகா சபையைவிட்டு விலகுவதாகவும் கூறுகிருர்.

---

## தந்திச் செய்தி

### சிங்கப்பூர் மார்க்கெட்
(ச. கி. தந்தி)

நவம்பர் 8உ

ரப்பர் பீக்கல் இருபத்தோன்பது வெள்ளி அறுபத்தாறு காசு.

---

### ரெங்கூன் மார்க்கெட்
(நமது நிருபர் தந்தி)

ரெங்கூன், நவம்பர் 10உ

| | |
|---|---|
| படகு நெல் | 104, 105 |
| பெரிய மில் ஸ்பெஷல் | 247—8 |
| ந. செய்ன் சின்னமில் | 259 |
| மீடோன் பஜார் | 305 |
| ரெடி புழுங்கலரிசி மார்க்கெட் லாங் | 260, 265 |
| மில்சார் | 250, 260 |
| புல்பாயில்டு | 240, 245 |

---

### சென்னை மார்க்கெட்

சென்னை, நவம்பர் 9உ

| | | | |
|---|---|---|---|
| பம்பாய் ஆலைத்தங்கம் | 34 | 7 | 6 |
| ஷை வாயிதா | 34 | 9 | 0 |
| மூனா தோலா 1-க்கு | 34 | 1 | 6 |
| சவரன் மொத்தம் | 22 | 4 | 9 |
| ஷை சில்லறை | 22 | 5 | 0 |
| வெள்ளி 100 ரூ. எடை | 51 | 0 | 0 |
| ஷை ரூ. 1 எடை | 0 | 8 | 6 |

---

### லண்டன் மார்க்கெட்
ரப்பர் விலை

நவம்பர் 8உ

ராத்தல் ஒன்றுக்கு 6¾ பென்ஸ்.

---

## கப்பல் செய்திகள்
### நாகபட்டினத்திற்கும் பினங்குக்கும்
(ஏஜண்டினிடமிருந்து)

புறப்படுதல்

கப்பல்கள் நாகப்பட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரோணு | 20—11—37 |
| ரஜூலா | 4—12—37 |
| ரோணு | 18—12—37 |

வருதல்

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டணத்துக்கு வரும் தேதி வருமாறு:—

| | |
|---|---|
| ரோணு | 11—11—37 |
| ரஜூலா | 25—11—37 |
| ரோணு | 9—12—37 |
| ரஜூலா | 23—12—37 |

---

### புதுச்சேரியிலிருந்து சிங்கப்பூர்-செய்கோன்

புதுச்சேரியிலிருந்து கீழ்க்கண்ட தேதிகளில் கீழ்க்கண்ட கப்பல்கள் சிங்கப்பூர் செய்கோன் முதலிய இடங்களுக்குப் பிரயாணமாகின்றன:—

| | |
|---|---|
| மெட்சின்ஜர் | 24-11—37 |
| டி அர்டாக்னன் | 21-12—37 |

---

## கிட்டப்பா தினம்
### நான்காவது வருஷாப்தீகம்

ஸ்ரீமான் எஸ். ஜி. கிட்டப்பாவின் நான்காவது வருஷாப்தீக தினத்தை வருகிற 18-11-37 (கார்த்திகை 3உ) வியாழக்கிழமை செங்கோட்டை குலசேகரபுரம் தெருவிலிருக்கும் ஸ்ரீமான் எல். சட்டநாதக் கரையாளர் பங்களாவில் மிகச்சிறப்பாகக் கொண்டாடத் தீர்மானித்திருக்கிறது. அன்று காலை ஏழைகளுக்கு (ஹரிஜனங்கள் உள்பட) அன்னதானமும், மாலை கிட்டப்பாவின் உருவப்பட ஊர்வலமும், சங்கீதப் போட்டியும், பொதுக்கூட்டமும் நடைபெறும்.

## தமிழ் மாகாண மகாநாடு

### வரவேற்புக் கமிட்டி அமைக்கப்பட்டது

பெரியகுளம், அக். 4—

1938ம் வருஷம் ஜனவரிமீ நடைபெறப் போகும் தமிழ் மாகாண மகாநாட்டுக்கு வரவேற்பு கமிட்டி அமைக்கவும் கமிட்டி தலைவர் மற்றும் உத்யோகஸ்தர்கள் தேர்தல் நடத்தவும், நேற்று வத்தலக்குண்டு ஸ்ரீ. வா. அ. அப்துல்கரீம் பங்களாவில் திண்டுக்கல் ஜில்லா காங்கிரஸ் அநுதாபிகள், ஊழியர்கள் கூட்டம் ஒன்று நடைபெற்றது. மட்டப்பாறை ஸ்ரீ. வெங்கட்ராமஅய்யர் வரவேற்புக் கமிட்டி தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். ஸ்ரீமான்கள் டி. எஸ். முஹம்மது அப்துல் காதர் ராவுத்தர், ஏ. எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார், மரியசூசை செட்டியார், எஸ். எஸ். காதர் மொகதீன் ராவுத்தர் இந்த 4 பேரும் உபதலைவர்களாகவும், மதுரை ஜில்லா போர்டு உபதலைவர் ஸ்ரீ. எஸ். ஏ. ரெங்கசாமி செட்டியார் பொக்கிஷதாரராகவும், திண்டுக்கல் ஜில்லா காங்கிரஸ் கமிட்டி தலைவர் ஸ்ரீ. எம். எஸ். அப்துல் சத்தார் சாகிப் காரியதரிசியாகவும் ஸ்ரீ. பி. எஸ். சங்கரன் உதவி காரியதரிசியாகவும் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கின்றனர்.

## வேகுப்பட்டி விவேகானந்த சபையின்

### ஐந்தாம் மாதக் கூட்டம்

நிகழும் ஈஸ்வர ஞு ஐப்பசிமீ 16ம் நாள் (1-11-37) திங்கள் கிழமை பிற்பகல் 3 மணிக்கு இவ்வூர் இரத்தினவிலாச வாசகசாலைக் கட்டிடத்தில் சிவகாம சுந்தரி செந்தமிழ்ப் பாடசாலைத் தமிழாசிரியர் உயர்திரு. M சுப்பிரமணிய தேசிகரவர்கள் தலைமையில் நடைபெற்றது. அவ்வமயம் விகடக்களஞ்சியம் உயர்திரு. ந. க. சி. கா. காசிவிஸ்வநாதச் செட்டியார் அவர்களும் சமஸ்கிருத வித்வான் N. சட்டநாதய்யாவர்களும் அமைச்சர் L. வள்ளியப்பா அவர்களும் முறையே "சமூக சீர்திருத்தம்" பரோபகாரம், பெற்ருேர் கடமை என்னும் பொருள்கள்பற்றி இனிமையாக சொற்பொழி வாற்றினர்கள். காரியதரிசி நன்றிகூறக் கூட்டம் இனிது நிறைவேறியது.

## வயிரவன்பட்டி

(ஒரு நிருபர்)

2—11—37

இன்று மாலை 4-30 மணிக்கு திரு. உ. கா. சின்னையா பிள்ளை அவர்கள் தலைமையின் கீழ் செவ்வாய் கூடுகிற மைதானத்தில் கிராமக் காங்கிரஸ் சபையின் சார்பாக பொதுக்கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் சிறுகூடல்பட்டி திரு. செ. பழ. அழகுப்பான் அவர்கள் ஓர் சொற்பொழிவாற்றிய பின் தலைவரவர்கள் முடிவுரை கூறக் கூட்டம் இனிது நிறைவெய்தியது.

## கைத்தொழில்பற்றிய கட்டுரைப் போட்டி

"இரும்பு, செம்பு, பித்தளை முதலிய லோகங்களாலான கைத்தொழில்களை காலத்திற்கேற்றவாறு வியாபார முறையில் லாபகாமாக—ஆனல் குடிசைத் தொழில்களாகவே—செய்வது எப்படி?"

எனும் விஷயம்பற்றி தமிழ் அல்லது ஆங்கிலத்தில் எழுதப்படும் முதல் இரண்டு கட்டுரைகளுக்குப் பரிசுகள் அளிக்கப்படும்.

கட்டுரைகள் புல்ஸ்கேப் சைஸில் 20-பக்கங்களுக்கு உட்பட்டு டைப் செய்யப்பட்டதாக அல்லது முத்துப்போன்ற எழுத்துக்களால் எழுதப்பட்டதாக விருக்கவேண்டும். இக்கட்டுரைப் போட்டியில், ஜாதி மத பேதமின்றி எல்லோருக்கும் கலந்து கொள்ள உரிமையுண்டு. கட்டுரைகள் 1938 ஜனவரி 15 தேதிக்குள் கிடைக்கக் கூடியவாறு "ஆசிரியர் விஸ்வபந்து காரைக்குடி" என்ற விலாசத்திற்கு அனுப்புதல் வேண்டும். கட்டுரைகளில் மிகச் சிறந்ததாகவுள்ளதற்கு ஓர் தங்கமெடலும் அதற்கு அடுத்தபடியாகவுள்ளதற்கு மத்தியில் தங்கம் வைத்த ஒரு வெள்ளி மெடலும் பரிசாக அளிக்கப்படும். கட்டுரைகள் விஷயமாக நீதிபதிகளின் தீர்ப்பே முடிவானது. பரிசு பெற்ற கட்டுரைகளின் சகல உரிமையும் விஸ்வபந்து ஆசிரியரைச் சேர்ந்தது என்று விஸ்வபந்து ஆசிரியர் தி. ம. நடராஜன் அறிவிக்கிறார்.

## வட இராமநாதபுரம் ஜில்லாபோர்டு கூட்டம்

### ஸ்ரீமதி விசாலாட்சி வெளியேற்றம்

சிவகங்கை அக் 31—

நேற்று சிவகங்கை எஞ்ஜினியர் ஆபீசில் நடைபெற்ற வடராமநாதபுரம் ஜில்லா போர்டு கூட்டத்தில் காங்கிரஸ் அங்கத்தினரான ஸ்ரீமதி விசாலாட்சி அம்மாள் கூட்டம் நடந்துகொண்டிருக்கையில் கூட்டத்தைவிட்டு வெளியேறிவிட்டார்.

கடைசி நேரத்தில் சப்ளிமெண்டரி அஜண்டாவிலிருந்த அலுவல்களைச் சபை கவனிக்கவேண்டுமென காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்கள் அத்தனை பேர்களும் ஏகமுகமாக அபிப்பிராயப்பட்டதால் அவர்களது செய்கையைக் கண்டிக்கும் முறையில் மேற்படி ஸ்திரீ அங்கத்தினர் வெளியேறினர்.

இந்த அலுவல்களில் ஒன்று சபை கூடுவதற்கு முன் நடைபெற்ற கட்சிக் கூட்டத்தில் ஆலோசிக்கப்பட்டு அதை நடத்திச் செல்வதெனத் தீர்மானிக்கப்பட்டிருந்தும் வெளியேறும் சம்பவம் நிகழ நேரிட்டது.

எந்தெந்த விஷயங்களில் தாம் வித்தியாசப்படுகிறரோ கட்சி மெம்பர்களின் நோக்கங்களுக்கு அவற்றைப்பற்றி சபை நடவடிக்கைகளின் மத்தியிலேயே காங்கிரஸ் மெம்பராகிய ஸ்ரீமதி விசாலாட்சி எடுத்துக் காட்டியதைச் சிலர் விரும்பவில்லை. தலைவர் ஸ்ரீமான் சி. வி. சிடி. வெங்கடாசலம் செட்டியார் தங்கள் மனக் கருத்துக்களை அந்தரங்கமாகப் பேசித் தீர்த்துக்கொள்ளும்படி சில நிமிஷ நேரம் கொடுத்தார்.

அதன் பேரில் காங்கிரஸ் கட்சி அங்கத்தினர்சிறிதுநேரம் ஒன்றுகூடிக்கலந்து ஆலோசித்து ஸ்ரீமதி விசாலாட்சியைத் தவிர மற்றவர்கள் அனைவரும் அதே கூட்டத்தில் நடைமுறைகள் அலுவல்களைத் தொடர்ந்து கவனிக்க வேண்டுமென அபிப்பிராயப்படுவதாக அறிவித்தனர். தம் கட்சியின் செய்கையைத் தாம் அங்கீகரிக்கவில்லை என்பதற்கு அறிகுறியாக ஸ்ரீமதி விசாலாட்சி வெளியேறினர்.

கூட்டத்திற்கு 14 அங்கத்தினர்கள் வந்திருந்தனர். தலைவர் ஸ்ரீமான் வெங்கடாசலம் செட்டியார் தலைமை வகித்தார். நியமன ஸ்தானங்கள் ஒழிக்கப்பட்ட பிறகு நடைபெறும் முதல் கூட்டம் இதுவேயாதலால் சபை நடவடிக்கைகளைக் கவனிப்பதற்காக பொது மக்களில் ஏராளமானபேர்கள் கூடியிருந்தனர்.

### பிரேரணை வாபீஸ்

நடைமுறை அலுவல்கள் கவனத்திற்கு எடுத்துக் கொள்ளப்படுவதற்கு முன்பாக ஸ்ரீமான் வி. எஸ். ஆர். எம். வள்ளியப்ப செட்டியார் 1937-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 26-ந் தேதி வரைக்கும் தாம் அனுப்பிவைத்த கேள்விகள் இன்னும் நடைமுறையில் சேர்க்கப்படாமலிருப்பது போர்டின் வேலை திருப்திகரமாக நடைபெறவில்லை என்பதைக் காட்டுவதால் இதைப்பற்றி யோசிப்பதற்காக கூட்டத்தின் இதர நடவடிக்கைகளை 5 நிமிஷ காலத்திற்கு ஒத்திவைக்க வேண்டுமெனப் பிரேரித்தார். ஸ்ரீமதி விசாலாட்சி அம்மாள் இதை ஆமோதித்தார்.

இனி இம்மாதிரி நிகழாது என்று தலைவர் உறுதி கூறியதன் பேரில் டி பிரேரணை வாபீஸ் பெறப்பட்டு நடைமுறை அலுவல்கள் கவனத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டன.

### மாதத்திற்கோரு கூட்டம்

ஸ்ரீமான் சேஷாத்திரி அய்யங்காரின் கேள்விகளுக்கு பதில் கூறப்பட்ட பிறகு போர்டின் கூட்டம் குறைந்தது மாதத்திற்கு ஒரு தடவையாவது கடைசி சனிக்கிழமைகளில் நடைபெற வேண்டுமென சபை தீர்மானித்தது.

காரியதரிசி ஸ்ரீமான் எம். பி. அலெக்ஸாண்டர், எம். ஏ. பி. எல். அவர்களது சம்பளத்தை ரூ. 150 க்குக் குறையாமல் நிர்ணயிக்கப்பட வேண்டுமென்று சபை பெருவாரியான ஓட்டுகளால் முடிவு செய்தது.

### பிரசவ வசதி ஸ்தலங்கள்

இரண்டு போர்டுகளுக்கும் பொதுவான ஒரு ஸ்திரீ வைத்திய அதிகாரியுடன் ரூ. 4800 செலவில் நான்கு பிரசவ சிசு,சம்ரட்சணை ஸ்தலங்களை ஏற்படுத்துவதற்கான திட்டங்களை ராமநாதபுரம் ஜில்லா சுகாதார அதிகாரி வகுத்திருந்ததையும், இவற்றின் செலவில் 25 சத விகிதத்தைச் சர்க்கார் கொடுத்துதவ வேண்டுமென மனுச்செய்து கொள்வதென்பதையும் கூட்டம் அங்கீகரித்தது.

காங்கிரஸ் மெம்பராகிய ஸ்ரீமான் கருமுத்து சிவலிங்கம் ஜில்லா செகண்டரி கல்வி போர்டின் அங்கத்தினராக ஏகமனதாகத் தெரிந்தெடுக்கப் பட்டார்.

### சிவகங்கையில் கைத்தொழில் பள்ளி

சிவகங்கையில் மேலூர் ரஸ்தாவிற்கு மேலண்டைப் பக்கத்தில் 38-10 ஏகரா விஸ்தீரணமுள்ள பூமியைச் சிவகங்கை ஜமீன்தார் இனமாக வழங்க முன்வந்திருப்பதாலும், இந்த இடத்தை மதுரை விவசாய டெபுடி டைரக்டர் அங்கீகரித்திருப்பதாலும் தற்போது முத்தினத்திலுள்ள போர்டு கைத்தொழில் பள்ளிக்கூடத்தை சிவகங்கைக்கு மாற்றுவதென போர்டு தீர்மானித்தது.

ஸ்ரீமான் கருமுத்து சிவலிங்கம் பிரேபித்ததின் பேரில் இனிமேல் ரோடு காண்டிராக்டு டெண்டர்களைக் காரியக் கமிட்டி முன்பே முடிவு செய்யவேண்டுமென சபை தீர்மானித்தது.

### ஹிந்தி ஆசிரியர்கள் நியமனம்

போர்டின் நிர்வாகத்திற்குட்பட்ட எல்லா உயர்தர ஆரம்ப பள்ளிக்கூடங்களிலும் ஹிந்தி ஆசிரியர்களை நியமிக்க போர்டார் உத்தேசித்திருக்கும் விஷயமாக கவர்ன்மெண்டார் தங்கள் உத்தரவைப் புனராலோசனை செய்து போர்டார் உத்தேசத்தை அங்கீகரிக்க வேண்டுமெனக் கேட்டுக்கொள்ளுவதாகத் தீர்மானிக்கப்பட்டது.

### ரஸ்தா அபிவிருத்திக்காக நகரத்தாரின் நன்கோடை

சுமார் ஆறு மைல் தூரத்திற்கு புதிய ரஸ்தா போடுவதற்காக பாகனேரி நகரத்தார்கள் கொடுத்துள்ள 10000 ரூபாய் நன்கொடையைச் சபை ஏற்று பாராட்டியது.

ரூ. 60,000 செலவில் அமைக்கப்பட்ட ஸ்ரீமான் எம். ஆர். ஆர். எம். எம். ஆர். ராமஸ்வாமி செட்டியாருக்கு சொந்தமான பனங்குடி நடராஜபுரத்திலிருந்து நாட்டரசன்கோட்டைக்குச் செல்லும் ரஸ்தாவின் நிர்வாகத்தை ஏற்றுக்கொள்ளுவதென சபை முடிவு செய்தது.

திருத்திப்பட்டுக் கண்மாய்வரையில் புதிய ரஸ்தா போட அவசியமான நிலங்களை வாங்கித் தருவதுடன் ரூபாய் 1250 நன்கொடையளிக்குமாறும் மேற்படியாரைச் சபை கேட்டுக்கொண்டது.

இன்னும் பல ரஸ்தா திட்டங்களுக்காக 27,000 ரூபாய் பெறுமான திட்டங்களைச் சபை சாங்கிஷன் செய்தது இவ்வகையில் நகரத்தாரிடமிருந்து கிடைத்துள்ள நன்கொடை ரூபாய் 16250 ஆகும்.

## காரைக்குடியில் கதர் விற்பனை

காரைக்குடி அகில பாரத சர்க்கா சங்கக் காதி வஸ்திராலயத்தில் அக்டோபர் 1உ முதல் நவம்பர் 1உ வரை (தீபாவளி வியாபாரம் உள்பட) மொத்தம் ரூ. 10440—9—0க்குக் கதர் விற்பனையாகியிருக்கிறது. மொத்தம் இந்த மாதத்தில் காரைக்குடியில் சுமார் 30 ஆயிரம் ரூபாய்க்கு விற்பனையாகியிருப்பதாகத் தெரிகிறது.





(6-ம் பக்கத் தொடர்ச்சி)

அநேக பிற வைத்தியர்களுக்கும், டிஸ்டிரிக்ட் மெடிகல் ஆபீசருக்குங்கூட சிகித்ஸை செய்து குணப்படுத்தியிருக்கிறேன்.

ஆனல் தாங்கள் ஆங்கிலத் துறையிலும், ஆங்கில டாக்டர்களுக்கிடையிலும் அதிகம் பழகி வந்திருக்கலாம். இந்திய வைத்திய முறைகளைக் கையாளும், இந்திய வைத்தியர்களிடம் தங்களுக்கு அதிக உறவு இருந்திருக்க முடியாதென்று கருதுகிறேன்.

ஏனெனில், ஆங்கில வைத்தியமானது செலவு ஒன்றை எடுத்துக் கொண்டாலும் பணக்காரர்களிடையேதான் அவ்வைத்தி மேல்நாட்டுப்பழக்கவழக்கங்களையே தாங்கள் அனுசரித்து வந்திருக்கிறீர்கள் என்று கருதுகிறேன்.

இந்திய தேசத்து வெப்ப நிடபங்களுக்கும் இந்திய மக்களின் உடல் உணவு, தொழில்களுக்கும் தகுந்தாற்போல இந்திய மருத்துவ சாஸ்திரங்கள் அமைத்திருக்கிறார்கள். காங்கிரஸ் மகாசபையிலும், இந்திய வைத்தியங்களை இந்தியாவினின்றும் ஒழித்து, ஆங்கில வைத்தியத்தைத் தான் இந்தியா கைக்கொள்ளவேண்டுமென்று ஒரு விதத் திட்டமும் போட்டிருப்பதாகவும் தெரியவில்லை. இந்தியாவிற் பிறந்த எந்த இந்தியரும், தனிப்பட்ட முறையிலும், இந்திய வைத்தியத்தை வெறுக்கமாட்டார்கள், காங்கிரஸ் மகாசபைத் தலைவராக இருக்கும் தாங்கள் இந்திய வைத்தியம் சிறந்ததல்லவென்று காரணமில்லாமல் தள்ளுவது தர்மமும், நியாயமுமாகாது என்று கருதலாம்.

இந்திய வைத்தியர்கள், "கேட்லாக் வைத்தியர்களில்லை." இந்தியாவிலே உண்டாகிற சாக்குகளைக் கொண்டு அவர்களே மருந்து செய்து உபயோகிக்கிறார்கள். இந்தியாவிலுண்டாகிற பச்சிலைச் சாக்குகளெல்லாம் பணச் செலவும் பிரயாசையுமின்றி ஆங்காங்கு கிடைக்கிறது, பாடாணங்களையும் அவர்களே செய்துகொள்ள முடியுமாறு சாக்கு வைப்பு நூல்களும். இந்தியாவில் பல்லாயிரக் கணக்கிலிருக்கின்றன.

## பண்டித ஜவஹருக்குக் கடிதம்

### இந்திய வைத்திய முறை தாழ்வானதா?

தேசமென்று ஒன்றிருந்தால் அங்கிருக்க வேண்டிய முக்கியமானவைகளில் தலைசிறந்தது வைத்தியம். அவ்வைத்தியம் இந்தியாவிற்றான் முதன்முதலிற் கண்டுபிடித்து உலக முழுவதும் இதைப் பின்பற்றி இன்னும் ஆராய்ச்சி செய்துகொண்டே போய்க் கொண்டிருக்கிறது. இந்தியா பிறநாடுகளைக் காட்டினும், வைத்தியத்திற்றான் அதிகம் உழைத்துப் பூரணத்வத்தை யடைந்திருக்கிறதென்று கருதப் பல காரணங்களிருக்கின்றன.

"டிப்பியாக்" கல்லூரி மாணவர்களுக்கு இந்திய வைத்தியம் சிறந்ததல்ல வென்று கூறியிருக்கும் தங்களது அபிப்பிராயமானது இந்திய வைத்திய முறைகளை அவமதிப்பதுடன், இந்திய வைத்தியர்களின் உற்சாகமும் குறைவதோடு மாணவர்களின் ஆர்வத்திற்கும், இந்திய வைத்திய முன்னேற்றத்திற்கும், ஆபத்து விளைவிக்கக்கூடுமென்பதையும் தங்களுக்கு வணக்கத்துடன் தெரியப்படுத்திக் கொள்ளுகிறேன்.

சாதாரண தனிப்பட்ட மனிதன் கூறும் அபிப்பிராயங்களையும் இந்திய தேசத்துக் காங்கிரஸ் தலைவர் என்கிற நிலையில் தாங்கள் தனிப்பட்ட முறையில் கூறினாலும், அதற்கிருக்கும் பேதா பேதங்களையும், உலகம் கவனிக்காமலிருக்காது என்பது அறிவிலுயர்ந்த தங்களுக்கு நான் எடுத்துக் கூறுமலே விளங்கும்.

வைத்திய முறையில் நம் நாட்டிலிருந்து பிறநாடுகள் தெரிந்துகொண்டதெவ்வளவு? பிற நாட்டிலிருந்து நாம் தெரிந்துகொண்டதெவ்வளவு? பிற நாட்டு வைத்தியங்களுக்கும், நம் நாட்டு வைத்தியங்களுக்குமுள்ள தாரதம்மியங்களென்ன? தற்போது இந்தியா எந்த வயித்தியத்தைக் கொண்டு தங்கள் பாதுகாப்பை நடத்துகிறது? இந்திய வைத்தியம் முன்னிலிருந்த நிலையென்ன? இப்போதைய நிலையென்ன? இனிமேல் அவற்றிற்குச் செய்ய வேண்டியதென்ன? இந்திய வைத்திய வளர்ச்சிக்குத் தடையாய் இருப்பவை எவை? பிற வைத்தியங்களைப் போல் சுதேச வைத்திய சாஸ்திரங்கள் பூரண ஆராய்ச்சியோடு எல்லா வகைகளும் சொல்லப்பட்டிருக்கிறதா? ஏதேனும் குறைந்திருக்கிறதா? அல்லாது பிற வைத்திய சாஸ்திரங்களில்லாத உயரிய வழிகள் அதிகமாக இந்திய மருத்துவ சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கிறதா? இம் முறைகள் பிற நாட்டாரும் பலனடையச் செய்ய தகுதியுடையதா? இந்திய வைத்தியத்தைக் கொண்டு இந்தியா தங்கள் பாதுகாப்பை நடத்திக்கொள்ள முடியுமா? அல்லது ஓரளவாவது அந்நிய நாட்டு உதவி தேவையா? என்பனபோன்ற ஆராய்ச்சிகளைச்செய்ய இந்திய வைத்தியக் கமிட்டி ஒன்று ஏற்படுத்தி அக்கமிட்டியின் மூலமாகத் தங்களின் அபிப்பிராய பேதங்களைப் பரிசீலனை செய்து அதன் லாப நஷ்டங்களை நன்கு ஆய்ந்து எந்த வைத்தியம் சிறந்தது? இந்திய வைத்தியத்தை முன்னேற்றவேண்டிய தவசியமா? என்பதன் முடிவுக்கு வருமாறு பணிவுடன் கேட்டுக்கொள்ளுகிறேன்.

தாங்கள் "கமலா நேரு" ஆஸ்பத்திரி ஏற்படுத்துவதற்கு முன் இக்கமிட்டியைக் கூட்டிப் பரிசீலனை செய்வீர்களானல் தேசத்துக்கு நலமாக இருக்குமெனக் கருதுகிறேன்.

கமிட்டி நியமிப்பதென்றல் இந்திய தேசத்திலுள்ள சித்த, ஆயுர்வேத, யூனனி, எல்லா வைத்தியர்களையும் கலைக்கிட்டு விகிதாசாரப்படி போர்டமைத்தல் நலமெனக் கருதுகிறேன்.

இங்ஙனம்
V. P. கந்தசாமி V. P. DS.
L. F. சித்தவைத்திய சாலை
திருமாஞ்சோலை
(ராமநாதபுரம் ஜில்லா)

## "பெட்ரோல் வேண்டாம்"

பிரெஞ்சு மோட்டார் கார்கள் இனிமேல் பெட்ரோலுக்குப் பதிலாக ரம்பத் தூள்களால் நிரப்பப்படும்.

பல பெரிய தொழிற்சாலைக்காரர்கள் பெட்ரோலுக்குப் பதிலாக இனிமேல் ரம்பத் தூள்களால் காரை ஓட்ட முயற்சி செய்து சீக்கிரத்தில் இக்காட்சியை ஜனங்களுக்குக் காட்டுவார்கள். யுத்த காலங்களில் பெட்ரோலுக்கு அதிக கிராக்கி யிருக்கக் கூடுமாதலால், அதனல் கார் முதலிய யந்திரங்களுக்கு இடைஞ்சல் ஏற்படாமல் இருப்பதற்காக இத்தகைய ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன.

## வாயாலெடுத்தான்!

### தவளை வீழ்ந்தது

மாண்டுவா என்ற ஊரில் நோய்வாய்ப்பட்ட குழந்தை யொன்றுக்கு டாக்டரால் மருந்து கொடுக்கப்பட்டது. குழந்தை உடனே வாந்தியெடுத்தபோது ஒரு உயிருள்ள தவளை ஒன்று கீழே விழுந்தது. ஆராய்ச்சி செய்தபோது இக்குழந்தை ஒரு குட்டையிலுள்ள தண்ணீரைக் குடித்ததாகவும் அத்தண்ணீரில் தவளை முட்டை இருந்ததாகவும் தெரிகிறது.

## புரொபசர் பாரதியார் கவனிக்க

கூனூரில் வக்கீலாக இருக்கும் ஸ்ரீ. எஸ். ஆர். நாராயண ஐயர் "ஹிந்து" வில் பின் வருமாறு எழுதுகிறார்:—

ஹிந்தியை எதிர்க்கும் கிளர்ச்சியின் முன்னணியில் அண்ணாமலை சர்வகலாசாலை புரொபசர் ஒருவர் இருந்து வருகிறார், அவர் கூறும் காரணங்களை யெல்லாம் காணும் கவனித்து வருகிறேனென்றாலும் ஹிந்தியைப் புகுத்துவதால் தமிழ் அபிவிருத்திக்கு எப்படி இடையூறு ஏற்படும் என்பதை அறிய முடியவில்லை. நீலகிரியில் பெரும்பான்மையான ஹரிஜனங்கள் மிலிட்டெரி சர்விசில் இருப்பதால் ஹிந்துஸ்தானியை அறிந்தவர்கள் மட்டுமே ராணுவத்தில் சேர்க்கப்படுகிறார்கள். மற்றும் அப்பாஷையை அறிந்த பலர் வேறு பல இடங்களுக்கும் சென்று பணம் திரட்டிக் கொண்டு பணக்காரர்களாகத் திரும்பி வருகிறார்கள். இதனால் ஹிந்தி தெரியாத இங்குள்ளவர்கள் தாங்கள் அப்பாஷையைக் கற்றுக் கொள்ளாமல் போனதற்காக வருந்துகிறார்கள். இது மட்டுமன்றி, எனது மதிப்புக்குரியவரும் தமிழறிவிற் சிறந்த வருமான அந்த புரொபசர் இம்மாதிரி ஹிந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியை ஆந்திரா, கர்னாடக, கேரள தேசங்களில் ஏன் நடத்தவில்லை என்பதை மக்களுக்கு விளக்குவாரா? அப்பிரதேசங்களிலுள்ளவர்கள் தங்கள் தாய் பாஷைகளுக்கு ஹிந்தியால் ஆபத்து வரும் என்று அஞ்சவே இல்லை. அசோகர், சமுத்திரகுப்தர் அக்பர் முதலிய அரசர்கள் காலத்தில் இந்தியாவின் பெரும் பாகம் ஒரே அரசரின் ஆளுகையில் இருந்த போதும் தமிழ்நாட்டின் சில பகுதிகள் தானே அந்த ஒற்றுமையில் சேராமல் தனித்து நின்று இந்தியாவின் 'அல்ஸ்டராக' இருந்தது. சென்னை மாகாணத்தின் இதர பாகங்களில் உள்ளதை விட அதிகமாக இத்தமிழ் நாட்டில் தான் பிராமணர்—பிராமணரல்லாதார் சச்சரவு அதிகமாக இருக்கிறது. நமது தமிழ்நாடு இன்னமும் அவ்வாறே தனித்து இந்தியாவின் அல்ஸ்டராக இருக்க வேண்டுமென்று அந்த புரொபசர் விரும்புகிறாரா? அவர் வட இந்தியாவில் சுற்றுப்பிரயாணம் செய்திருக்கிறாரா இல்லையா என்பது எனக்குத் தெரியாது. இரண்டு வருஷங்களுக்கு முன் நான் பம்பாயில் சில நாட்கள் தங்கியபோது ஹிந்தி தெரியாமல் கரைமேல் எடுத்துப் போட்ட மீன்போல் அவஸ்தைப் பட்டேன். நான் பலரிடமும் ஆங்கிலத்தில பேசிய போது மேல்நாட்டு உடைகளை நன்கு அறிந்தவர்களே அப்பாஷையை அறியாமல் எனக்குப் பதில் சொல்லவில்லை, இதைக்கண்டு நான் ஆச்சர்யப்பட்டேன்.

தமிழர்கள் சென்னை மாகாணத்துக்கு அப்பால் சென்றால் எல்லாருடனும் தாராளமாகப் பழகுவதற்கேனும் ஹிந்தியை அறிந்திருக்க வேண்டுமே என்பதற்காகத் தான் இப்போது அது ஒரு பாடமாகப் புகுத்தப் படுகிறது. இம்மாகாணத்துக்கு அப்பாலுள்ள மக்களில் பெரும்பாலோர் ஹிந்தியையே பேசுகிறார்கள். தமிழர்களும் வட இந்தியா முதலிய இடங்களுக்குச் சென்று அவர்களுடன் தாராளமாகக் கலந்து பரஸ்பரம் தேச முன்னேற்றத்துக்கான காரியங்களைச் செய்ய வேண்டுமென்று இந்த புரொபசர் விரும்புகிறாரா! இல்லையா? என்பது தெரியவில்லை. தேசிய காங்கிரஸ் மகாசபையின் கூட்டங்களிலும் ஹிந்திதான் அதிகமாகப் பேசப்படுகின்றது. ஆயிரக் கணக்கான மக்கள் கூடியிருக்கும் அதில் தமிழர்களுக்குத்தான் அந்தப்பாஷை தெரிவதில்லை. ஒரு சுயநல எண்ணத்தை வைத்துக் கொண்டு பார்த்தாலும் ஹிந்தி படிக்க வேண்டியது அவசிய மென்று விளங்கும். வட இந்தியாவில் பர்தாமுறை அமலில் இருப்பதால் உபாத்தியாயினிகள் வேலைக்கும் பெண் டாக்டர்கள் வேலைக்கும் போதுமான அளவு பெண்கள் அகப்படுவதில்லை. நமது மாகாணத்தில் அம்மாதிரி பர்தா இல்லாமல் பெண்கள் பல துறைகளிலும் பழகுவதால் அவர்கள் ஹிந்தியையும் கற்றுக் கொண்டு விட்டால் வடநாட்டுக்குச் சென்று நல்ல உத்தியோகங்களைச் சம்பாதித்துக் கொள்ளலாம். இதனால் வேலையில்லாத் திண்டாட்டத்துக்கும் ஒருவாறு பரிகாரம் ஏற்படும். இப்போது வட இந்தியாவில் தொழில்களில் இருக்கும் தமிழர்களும் மிக்க சிரமத்தின் மீது தான் ஹிந்தியைக் கற்கிறார்கள். ஆதலின் இத்தகைய உதவி செய்வது தென்னிந்திய மக்களுக்கு ஆபத்தானது என்று சொல்வதில் என்ன பொருத்தமிருக்கிறதென்பது தெரியவில்லை. மேலும் புரொபசர் அவர்களைப் போல் நாம் அவ்வளவு தமிழ் படித்தவர்களல்ல வென்றாலும் தமிழின் இறவாத் தன்மையில் நமக்குள்ள நம்பிக்கை அவருக்கு இல்லை யென்றே தோன்றுகிறது. ஆங்கிலம், ஹிந்தி இவற்றுடன் பிரஞ்சு பாஷையைப் படித்தாலும் கூடத் தமிழ் அழியாது என்பது உறுதியான நம்பிக்கை, தமிழினிடம் ஒப்புயர்வற்ற அபிமானம் கொண்டிருந்த காலஞ்சென்ற மாணிக்க நாயகர் அவர்கள் தமிழர்கள் எந்தப் பாஷையையும் எளிதில் கற்கக் கூடியவாறு தமிழ் மொழியின் உச்சரிப்பு சப்தங்கள் தமிழர்களைத் தயாரித்திருக்கிறது எனக் கூறுவது வழக்கம். ஆகவே இத்தகைய நம்பிக்கை நமக்கு இருக்கும் போது நாம் தமிழ் அழியும் எனப் பயப்படுவதற்கே இடமில்லை.

## பிஜ்னூரில் காங்கிரஸ் வெற்றி

### லீக் முறியடிக்கப்பட்டது

ஐக்கிய மாகாண சட்டசபைக்கு பிஜ்னூர், நஜீபாபாத் தொகுதி மூலம் ஒரு ஸ்தானம் உண்டு. இது முஸ்லீம் தொகுதி. இதில் சென்ற தேர்தலின் போது முஸ்லிம் லீகின் சார்பாக திரு. ஹபீஸ் முகம்மது இப்ராஹிம் தேர்ந்தெடுக்கப்பட்டார். பிறகு சட்டசபையில் காங்கிரசுக்குள்ள மெஜாரிட்டியையும், காங்கிரசின் மகத்தான லட்சியத்தையும் உணர்ந்து காங்கிரசில் சேர்ந்தார். அதன் பயனாக இவர் காங்கிரஸ் மந்திரிகளில் ஒருவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர் முஸ்லிம் லீகின் சார்பாக சட்ட மெம்பரான படியால் சுயமரியாதையுள்ள இவர் தனது சட்டசபை ஸ்தானத்தை ராஜீநாமாச் செய்து அதே தொகுதியில் மீண்டும் காங்கிரஸின் சார்பாக அபேட்சகராக நின்றார்.

பிறகு லீக்கின் சார்பாகவும் இவருக்குப் போட்டியாக ஒரு அபேட்சகர் நிறுத்தப்பட்டார். தேர்தல் பிரசாரம் மிகவும் முட்முரமாக இருதரப்பாராலும் நடத்தப்பட்டன. முஸ்லிம் லீக் கட்சியைச் சேர்ந்தவர்கள் செய்த அட்டகாசங்களும் அக்கிரமங்களும் நேயர்களுக்குத் தெரிந்ததே. கடைசியில் தேர்தல் முடிந்தது.

ஓட்டுகள் கணக்கெடுக்கப்பட்டன. மொத்தம் அத் தொகுதிக்கு 13800 முஸ்லிம் வாக்காளர்கள் இருக்கின்றனர். இவர்களில் 9373 பேர் வாக்களித்தனர். காங்கிரஸ் அபேட்சகரான மந்திரி கனம் ஹாபிஸ் முகம்மது இப்ராகிம் 7271 ஓட்டுகள் பெற்றார்.

கான்சாகிப் அப்துல் ஸமீக் (லீக்) 2102 ஓட்டுகள் பெற்றார்.

காங்கிரஸ் அபேட்சகரான ஹாபிஸ் முகம்மது 5169 அதிக ஓட்டுகளால் முஸ்லிம் லீக்கை முறியடித்தார்.

முஸ்லிம் லீகின் கோட்டையென்று சொல்லப்பட்ட நாஜீபாபாத் ஒன்றிலேயே சுமார் 9000 வாக்காளர்கள் இருக்க முஸ்லிம் லீக் அபேட்சகர் மொத்தத்திலேயே 2102 ஓட்டுகளே பெற்றிருப்பதிலிருந்து காங்கிரஸை முஸ்லிம்கள் எவ்வளவு தூரம் ஆதரிக்கிறார்கள் என்பது புலனாகிறது.

## திறப்பு விழா

### கண்டரமாணிக்கத்திற்கு மந்திரி கனம் ராஜன் விஜயம்

சென்னை கவர்ன்மெண்டு சுகாதார மந்திரி கனம் டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் ராமனாதபுரம் ஜில்லா, கண்டரமாணிக்கம் ஸ்ரீ தண்டாயுதபாணி உயர்தர ஆரம்ப பாடசாலையின் புதிய கட்டிடத்தை ஈசுவர வருஷ ஐப்பசி மாதம் 30உ திங்கட்கிழமை காலை 10 மணிக்கு திறந்துவைப்பார்.

### கொழும்பு தனவைசிய இளைஞர் சங்கம் நான்காவதாண்டு நிறைவு விழா

கொழும்பு நவ, 1உ

தனவைசிய இளைஞர் சங்கத்தின் நான்காவதாண்டு நிறைவு விழா நேற்று (31-10-37) பிற்பகல் 4-30 மணித்தொடக்கமாக விமரிசையாக அலங்கரிக்கப்பெற்றிருந்த விவேகானந்த சபை மண்டபத்தில் ஸ்ரீலஸ்ரீ விபுலானந்த சுவாமிகள் அக்கிராசனத்தின்கீழ் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது.

சென்ற ஆண்டு அறிக்கை காரியதரிசியால் வாசிக்கப்பெற்றதும், சபைத் தலைவர் முன்னுரை வழங்கினார். அப்பொழுது அவர் தான் தனவைசிய சங்கக் கூட்டங்கள் பலவற்றில் இதுவரை கலந்துகொண்டிருப்பதாகவும் பல தனவைசிய நண்பர்களுடன் தனக்குத் தொடர்பு உண்டென்றும் அதனால் தான் பெருமையடைவதாயும் சொல்லி இலங்கை இந்தியப் பரஸ்பரத் தொடர்புக்குரிய அரிய பிரசங்கம் செய்தார்.

அடுத்தபடியாக சங்கை தங்கிய இக்ஸ்பரி அவர்கள் 'வாலிபர் கடமை' என்னும் பொருள்பற்றியும், பண்டிதர் மு. நல்லதம்பி அவர்கள் "இசைபட வாழ்தல்" என்னும் பொருளுரை குறித்தும், திரு. எஸ். மங்களேஸ்வரன் அவர்கள் "புலனடக்கம்" என்னும் விஷயம் குறித்தும், அதன் பின்னர் திருவாளர் பிச்சப்பா சுப்பிரமணியம் அவர்கள் 'தமிழ்த்தாய்' என்பதுபற்றி சில சொல்லி ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியார் பாடல்கள் சிலவற்றையும், மனோன்மணியத்திலிருந்து ஒரு வணக்கப் பாவையும் கூறி தமிழ்த்தாயின் பெருமையை விளக்கியும், இறுதியில் சென்ற ஆண்டு சங்கத்தின் தலைவராயிருந்த MR. MS கதிரேசன் அவர்கள் "எந்நாளும் இன்பமே" என்னும் பொருளுரை குறித்தும் சொற்பொழிவு செய்தனர்.

அப்பால் சங்க ஆண்டு நிறைவு வாழ்த்துத் தந்திகள், கடிதங்கள் பலவற்றை சபையோர்க்கு வாசித்துக் காண்பிக்கப் பட்டபின் புதுவருட உத்தியோகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

பின்னர் சபைத் தலைவர் சுவாமிஜீ அவர்கள் உரையாளர்களின் சொற்பொழிகள் பற்றி தம் கருத்தை மிக ருசிகரமாக எடுத்துக்கூறினார். அதன்பின் சபைத் தலைவர்கட்கும் சொற்பொழிவாளர்கட்கும், ஏனையபொதுமக்கட்கும் சங்கத்தின் மாஜி தலைவர் MR. MS. கதிரேசன் அவர்களால் நன்றி நவிலப்பட்டு கூட்டம் இனிது முடிவுற்றது.

#### புதுவருட உத்தியோகஸ்தர்கள்

தலைவர்:— திரு. K. ராமனுதனவர்கள், உபதலைவர்:— திரு. M. R. சேதுராமனவர்கள், காரியதரிசி:— திரு. S. P. ராமனுதனவர்கள், உபகாரியதரிசி:— திரு. V. மாணிக்கவாசகனவர்கள்.

## காரைக்குடி தாகூர் வாசகசாலை

காரைக்குடி, நவம்பர். 5—

31—10—37 ஞாயிற்றுக்கிழமை மாலை 6-மணிக்கு வாசகசாலைக் கட்டிடத்தில் கொடி வணக்கமும், கூட்டமும் நடைபெற்றது. கூட்டத்திற்கு திரு. என். எஸ். கோபாலன் அவர்கள் தலைமை வகித்தார்கள். தேவகோட்டை ஸ்ரீமான் ஹரிஜன் ரெங்கண்ணு அவர்கள் பி. ஏ., பி. எல், எம். எல். ஸி. கொடியேற்றி வைத்து நீண்ட நேரம் ஒரு அரிய சொற்பொழி வாற்றினார்கள். தொடர்ந்து பல அன்பர்கள் பேசிய பின்னர் தலைவர் முடிப்புரையுடன் கூட்டம் இரவு 8 மணிக்கு முடிவுற்றது.

2—11—37 செவ்வாய்க்கிழமை காலை 11-மணிக்கு வாசகசாலைக் கட்டிடத்தில் வாசகசாலை நிர்வாகக் கழகத்தின் சாதாரணக் கூட்டம் தலைவர் திரு. கி. கோவிந்தராஜுலு அவர்கள் தலைமையில் கூடி அடியிற்கண்ட தீர்மானங்களைச் செய்தது:—

1. குதிரை வண்டிகள் நிறுத்தி வைக்கப் பெற்றுள்ள கல்லுக்கட்டி மோதிலால் எம்போரியத்திற்கெதிரிலுள்ள இடமானது மிகவும் குறுகலானதாக இருப்பதாலும் அங்கு குதிரை வண்டிகள் நிறுத்திவைக்கப் பெற்றிருப்பதால் பொதுஜன போக்குவரத்திற்கு இடைஞ்சலாக இருப்பதாலும் பிரிவடைந்து நகரத்தின் தேவைக்கு குதிரை வண்டிகள் பல இடங்களில் நிறுத்திவைக்கப் பெறுதல் நலமாகையாலும் முனிசிபாலிட்டியார் இதில் கவனஞ் செலுத்தி ஆவன செய்ய வேண்டுமென்று இக்கழகம் தீர்மானிக்கிறது. 2, விபசார ஒழிப்பு முறையால் நகர மக்களுக்கு நன்மைகள் ஏற்படுமாகையால் இதற்கென நியமிக்கப் பெற்றுள்ள விபசார ஒழிப்புக் கழகத்தினருக்கு பொது மக்கள் ஆதரவு கொடுத்து அவர்களுக்கு ஊக்கமளிக்க வேண்டுமென்று இக்கழகம் பொதுமக்களைக் கேட்டுக் கொள்ளுகிறது. 3. தொழிலாளர்கட்கு விடுமுறை அவசியமாதலால் தமிழ் மாதத்தின் ஒவ்வொரு கடைசி ஞாயிற்றுக் கிழமையிலும் சாப்பாட்டுக் கிளப், காபி கிளப்புகள் நீங்கலாக மற்ற கடைகள் அடைக்கப்பெறல் வேண்டுமென இக்கழகம் வியாபார சங்கத்தாரைக் கேட்டுக்கொள்கிறது. 4. வாசகசாலைக்கு இனாமாக சாமான்கள் தந்தும் பத்திரிகை வருத்தித் தந்தும் வருகிற அடியிற்கண்டவர்களுக்கு காரியதரிசி நன்றியறிவித்துக் கடிதங்கள் எழுத வேண்டுமென முடிவு செய்யப்பெற்றது. திருவாளர்களான பழ. மெ. பெரி. மெய்யப்பா அவர்கள் (காந்தி உருவச்சிலை, பாரதமாதா படம், ஜவஹர் படம், விவேகானந்தர் படம், ஸரஸ்வதி படம், குமரன், குடிநூல், மணிக்கொடி) சிவ, மெய்யப்பன் அவர்கள் (ஊழியன்) பாரதி பிக்சர்பாலெஸ் (ஆனந்த விகடன்) டி, கே. சின்னப்பன் அவர்கள் (தமிழ் மணி.) 5. வாசகசாலையின் சார்பில் ஒரு தமிழ் இலக்கிய வகுப்பு நடத்த வேண்டும் என்று தீர்மானிக்கப் பட்டது. 6. மைசூர் சமஸ்தானத்தில் பிரஜா உரிமை மறுக்கப்படுவதை இக்கழகம் கண்டிக்கிறது. 7. நமது நகரத்தில் சுகாதாரக்கேட்டை உண்டாக்கக் கூடியதும் உயிருக்கு ஆபத்தை உண்டாக்கும் கிருமிகளை உடையதுமான குளங்கள் பல இருக்கின்றன. முனிசிபாலிட்டியாருக்குள்ள அதிகாரத்தைக் கொண்டு மேற்கூறியவாறுள்ள குளங்களைத் தூர்த்துவிட வேண்டுமென இக்கழகம் முனிசிபாலிட்டியாரைக் கேட்டுக் கொள்கிறது. 8. ஏகாதிபத்தியவெறிபிடித்த இட்லியையும் ஜப்பானின் சாமான்களையும் ஜாவின் பாரிலிருந்து இறக்குமதியாகும் சீனிகளையும் காங்கிரஸ் மகாசபையின் தீர்மானப்படி எல்லோரும் பகிஷ்கரிக்க வேண்டுமென்று இக்கழகம் கேட்டுக்கொள்கிறது. மேற்கண்ட தீர்மானத்தின் விஷயங்களை அண்டுப் பிரசார மூலம் வெளிப்படுத்துவதென்றும், அதற்குரிய செலவைத் தருவதாக ஒப்புக்கொண்ட அங்கத்தினர் திரு. வெ. சாமிநாதன் அவர்களுக்கு நன்றி கூறுவதாக தீர்மானிக்கப்பெற்றது. 9. சொய்டனிலிருந்து 28—10—37ல் புறப்பட்ட இந்திய விமானி J. B. நாயர் அவர்கள் பிரான்ஸின் பக்கத்தில் உயிர் அறுந்தமைக்கு இக்கழகம் பெரிதும் வருந்துகிறது. 10. முனிசிபாலிட்டியின் Agenda-க்களின் பிரதி ஒன்றை நமது வாசகசாலைக்கும் அனுப்பித் தரும்படி முனிசிபாலிட்டியாரை இக்கழகம் கேட்டுக்கொள்கிறது. இன்னும் சில தீர்மானங்களும் நிறைவேறின.





## கற்புள்ள சுந்தரி

லெ. கருப்பஞ்செட்டியார், பைஞ்சலோ.

கண்ணப்ப செட்டியார் பெருந்தனவந்தர். அத்துடன் யாவரும் மதிக்கத்தக்க நிலையிலும், பலருக்கும் நீதி கூறும் முறையிலும், சீர்திருத்த விஷயங்களிற் மிகப்பற்றுதலும் கொண்டவருமாவர். இவரது மனைவியையோ கொடிய அரக்கர் வம்சத்திலுதித்தவள் எனச் சொல்ல எவரும் தயங்குவதில்லை. அவ்வளவு குணமிகுந்தவராவர். இவர்களது ஏக புதல்வியே (நமது கதாநாயகி) "சுந்தரி". பெயருக்கேற்ற பொருத்தம் யாவும் மலிந்து காணும். அதற்கொவ்வ அருமையாகவும், பெருமையாகவும், அவளது விருப்பின்படி ஆடை அணிகலன்கள் உணவாதிகள் தயக்கமின்றிக் கொடுத்துத் தளதள வென்று வளர்த்து வந்தார்கள். 12-ம் ஆண்டு முடிவடைந்தது. தாய் திருமணம் பேச ஆரம்பித்தாள். சம்பந்தப் புறம் தங்களைப் போல் தனவந்தராயும், பெருமையுடையோராகவும், கவனித்துப் பேசிவந்தார்கள். மாப்பிள்ளையோ குஷ்டரோகமுடையவன். இருமல், இழைப்புமுண்டு. "கல்வி" என்பதைக் கனவிலும் அறியான். ஆனால் செல்வந்தரின் இரண்டாவது செல்வ மகன். பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் ஓர் மலைக்கும் மடுவுக்குமுள்ள வித்தியாசமென்பதை உலகமே நன்கறியும். கண்ணப்ப செட்டியார் திருமணம் செய்து கொடுக்க மறுத்தார். மறுத்துப் பயன் யாது? தம் இல்லத்தரசி துர்க்கா தேவியின் வார்த்தையை மறுத்துரைக்க இயலுமோ? முடியவே முடியாது. என் செய்வதென ஏங்கி மனைவி எது கூறினும் சரி என்று சொல்வதைத் தவிர வேறெதுவும் சொல்ல முற்படார். அவள் விருப்பப்படியே இச்சிறு வயதில் எதுவும் செய்ய இயலாத வருங்கால வாழ்க்கைக்குரிய வனிதா இரத்தினம் "சுந்தரி"யின் சம்மதமுமில்லாததும், பகுத்தறிவுங் கொவ்வாமலும், பணத்தின் நிலை அறியாமலும், வாழ்க்கையின் பெருமை தெரியாமலும் தாயின் நோக்கப்படியே திருமணம் நல்ல சுப முகூர்த்தத்தில் (பெரும்பாலோர் வெறுக்கத்தக்க முறையில்) நடாத்தி முடிந்தது.

திருமணம் நடந்த ஆறும் மாதம் மாப்பிள்ளை மாரடைப்பால் மரணமடைந்தார். "சுந்தரி"க்கு விதவைப்பட்டத்தைச் சூட்டினார்கள். அதற்குரிய சின்னங்களும் செய்யப்பட்டன. 14-ம் ஆண்டில் "சுந்தரி" புஷ்பவதியானாள். 18-ம் ஆண்டில் பருவ காலத்தின் உணர்ச்சி மேலிட்டது. தனக்கேற்ற ஆடவனை மறுமணம் செய்துகொள்ள விரும்பினாள். பெற்றோர்களின் அனுமதி கோரினாள். தந்தை இணங்கினார். தாய் தடி எடுத்துத் தாக்கினாள். இதுதான் வினவுக்கு விடைபோலும். மேலும் கூறுகிறாள்:—அடி சண்டாளி, விதியை நினைத்து வீட்டின் மூலையில் வெண் சேலையுடனிருக்காமல் என் குலத்தைக் கெடுக்க முன் வந்தனையா! மறுமணம் செய்தால் சமூகமே பாழாய் விடுமென்பதையும், ஊரார் ஏசுவார்களென்பதையும், பங்காளிகள் உறவு விட்டு விடுமென்பதையும், நமது குலப் பெருமை நசுங்கி விடுமென்பதையும் நீ அறியாய் போலும்! என்று ஆத்திரத்துடன் உரைத்துவிட்டு ஊர் வம்பாட வெளி ஏகிவிட்டாள். கண்ணப்ப செட்டியாரும் ஆறாத் துயரத்துடன் அன்பர்களிடம் தன் குடும்ப நிலையையும், தன் மனைவியின் துர்க்குணங்களையும் தனக்கேற்பட்டிருக்கும் மனக் கவலைகளையும் சொல்லி அவர்களின் தேர்தல் வார்த்தைகளை அங்கீகரித்துச் சிறிது நிம்மதியுடனிருக்க விரும்பி அயல்நாட்டுக்கு ஏகிவிட்டார்.

இது இவ்விதமிருக்க ஓர் நாள் மாலை சுமார் 7½ மணி இருக்கும். அக்நோத்தில் அவர்களுக்குச் சொந்தமான அழகிய "ஆனந்த விலாஸ்" என்றழைக்கப்படும் வீட்டின் அந்தப்புறப்பக்கம் நல்ல பூரணச் சந்திரன் தனது ஒளியை- அல்ல கடமையைச் சரிவரச் செய்துகொண்டிருக்கும் வேளை பூங்காவனத்திலிருந்து வரும் நறுமணம் அளவிடற் கரியதன்று. இவ்வித இன்பமயமான-இடத்தில்-நேரத்தில் தன்னந்தனியே யௌவனம் பரிபூரணமாய் நிறைந்த கட்டழகி (கன்னி) சுந்தரி (18 வயதுள்ள பருவமங்கை) கண்ணீரும் கம்பலையுமாய் நிமிடத்துக் கொருமுறை பெருமூச்சு விட்டுக்கொண்டிருந்தாள். அவளது உடலோ தளதளவென நன்னிறத்தாலும் முக வசீகரத்தாலும் காந்த சொரூபியாக திகழ்ந்தாளானாலும் காதல் உலகமாகிய இவ்வுலகின்கண் கணவனற்றுப், பயனற்று, விதவைச் சின்னங்களுடன் நேர்மையும் கால நிலையுமறியா ஒரு சில பிற்போக்காளர்கட்கு மத்தியில் கிடந்து உழல்வதைப் பார்க்கிலும் இறப்பதுமேலென எண்ணினாள்,

வாழ்வுக்குரிய இன்னாளில் வாழ்வென்ற விளக்கை வைதீகம் என்ற காற்றடித்து அணைத்துவிடுகின்றதே. விளக்கற்று இருள் சூழ்ந்துள்ள இடத்திலிருந்தும் [illegible] யும் என எண்ணி எழுந்தாள். அப்போது மணி 12 இருக்கும். நல்ல காரிருள். பைசாசங்கள்கூட அஞ்சத்தக்க அந்நேரத்தில் கன்னி சுந்தரி—கற்புள்ள சுந்தரி கடற்கரையை நோக்கினாள்—சென்றாள்—நின்றாள். சொல்லுகிறாள்:—என் அன்பு நிறைந்த தந்தையே! யான் உங்களைக் காண இவ்விடத்திலிருக்கிறேன். என் வார்த்தையை தங்கள் செவி ஏற்பதிற்கில்லாவிடினும் என் உள்ளக்கிடையிலுள்ளவற்றை சொல்லிவிடுகிறேன். இவ் வுலகத்தையும் இரக்கமற்ற தனவணிகச் சமூகத்தையும் பகுத்தறிவற்ற வைதீகக் கொடியார்களையும் நெஞ்சிரக்கமில்லாத வஞ்சகத் தாயையும் 'விதவை' என்ற இழிச் சொல்லையும் விடுத்து விண்ணுலகை அடையப்போகிறேன். அதுவே எனது அரும் பெரும் இறுதிப்பாக்கியம்! ஏ கடவுளே—கருணையம் கடலே—கற்பகமே கற்பகத்தரசே—காருண்ய மூர்த்தியே—ஏழைச் சிறுமி மேல் தயவு செய்து உன் பாதமலரடிக்குத் தொண்டு செய்ய அத்துடன் எனது அன்பார்ந்த சோதரிகட்கு ஓர் வழிகாட்டியாக இருக்க யான், முன்னணியிற் வந்துளேன். ஆட்கொள். என் அருமைத் தந்தையே! செல்லுகிறேன்."

அந்தோ! ஆழிக்கிரையானாள் அன்புள்ள சுந்தரி—

குறிப்பு:—இதில் வரும் பெயர் யாவும் வெறும் கற்பனையே.

### இலங்கை தேயிலை

#### ஜப்பானில் இறக்குமதி கட்டுப்பாடு

டோக்கியோ, அக். 30.

ஜப்பானில் முக்கியமில்லாத சமான்கள் அக்டோபர் மாதம் 11-ம் தேதியிலிருந்து லைசென்சுகளின்றி ஜப்பானில் இறக்குமதியாக முடியாது. அச்சாமான்களில் இலங்கை தேயிலையும் சேர்க்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. ஆகவே இலங்கை தேயிலை லைசென்ஸ் இல்லாமல் ஜப்பானில் இறக்குமதியாக முடியாது.

1936-ம் வருஷத்தில் இலங்கை ஜப்பானுக்கு 161,113 ராத்தல் நிறையுள்ள தேயிலையை ஏற்றுமதி செய்திருக்கிறது. இதன் பெறுமதி 56,049 ரூபாயாகும்.

## வைசிராயின் சென்னை விஜயம்

### ஜனவரி மாதத்தில் நிகழும்

கவர்ன்மெண்ட் அறிக்கை கூறுவதாவது:—வைசிராய் 1938-ம் வருஷம் ஜனவரி மாத ஆரம்பத்தில் சென்னைக்கு விஜயம் செய்ய உத்தேசித்திருக்கிறார். அவர் டில்லிக்குத் திரும்பிவருகையில் ஹைதராபாத் நிஜாமைப் பார்த்துவிட்டு வரவும் உத்தேசித்திருக்கிறார்.

### விதவையின் குமாரன்

லக்னோ என்ற ஹிந்து விதவை இஸ்லாம் மதத்தில் சேர்ந்து சமஸ்தான வேலைக்காரர் ஒருவரை அவள் மணந்து கொண்டாள். அவளுக்கு முதல் புருஷன் மூலம் நான்கு குழந்தைகள் பிறந்திருந்தன. மூத்தபையனுக்கு வயது 11.

அப்பையன் போபாலிலுள்ள ஹிந்து அநாதை ஆஸ்ரமத்திற்கு அனுப்பப்பட்டிருந்தான். அச்சிறுவன் தனது தாய்மதம்மாறிவிட்டபடியால் இனி அவளிடம் போகமாட்டேனென்று மறுத்துவிட்டான். ஹைகோர்ட்டில் இது சம்பந்தமாக நடந்த வழக்கில் சீப் ஜஸ்டிஸ் அவர்கள் பையன் சிறிதுகாலம் வரை முஸ்லிம் அநாதை ஆஸ்ரமத்திலிருக்க வேண்டுமென்றும் பிறகு தனது தாயினிடம் அனுப்பப்பட வேண்டுமென்றும் கூறினர்.

### போக்கிரித்தனம்!

#### லீக் தொண்டர்கள் செய்கை

பிஜ்னூர் தேர்தலில் முஸ்லீம் லீக் சார்பாக வேலை செய்யும் லீக் தொண்டர்கள் சிலர் நாஜியாபாத்தில் நடந்த ஒரு தேர்தல் கூட்டத்தில் கதர்க் குல்லாக்களை நெருப்பிலிட்டு தகனம் செய்தனராம்!

### "எங்களுக்கு சம்பளம் வேண்டாம்"

சென்னை ஜனப்பிரதிநிதி சபையில் 35 அங்கத்தினர்களும், மேல்சபை யங்கத்தினர்களில் 14 பேர்களும், தங்களுக்கு மாதச் சம்பளம் வேண்டா மென்று கூறிவிட்டதாகத் தெரிகிறது.



## ரோடு வசதி

### ரூ. 1,40,000 வரை செலவு செய்ய ஏற்பாடு

வடக்கு ராமனாதபுரம் ஜில்லா போர்டு எல்லையில், போர்டு பிரிக்கப்பட்டது முதல், ரஸ்தா அபிவிருத்தி மிக முக்கியமாய் கவனிக்கப்பட்டு வருகிறது. ரஸ்தாக்கள் அபிவிருத்திக்காக போர்டார் நகரத்தார் நன்கொடைகள் சேர்த்து சுமார் மொத்தம் 70,000 ரூபாயும் சர்க்காரிலிருந்து கிடைக்கப்பட்ட சுமார் ரூ 70,000-ம் ஆக மொத்தம் 1,40,000 ரூபாய்வரை ரஸ்தா அபிவிருத்திகாக 1938-ம் வருஷம் மார்ச்சு மாதத்திற்குள் செலவு செய்ய உத்தேசிக்கப்பட்டுவேலையும் நடைபெற்று வருகிறது. இந்தபோர்டிலுள்ள 14 சர்க்கிள்களிலும் அந்தந்தமெம்பர்கள் தத்தம் எல்லையில் வேண்டியரஸ்தாக்களை தவிர ரூ 5000க்கு மேற்படாமல் திட்டம் போட்டு அனுப்பும்படி போர்டு தலைவர் மெம்பர்களிடம் கூறியிருக்கிறார். அதற்கேற்ப ரஸ்தாக்கள் திட்டங்கள் அனுப்பப்பட்டு வேலை துரிதமாக நடைபெற்று வருகிறது.

### திரு. மு. சித. மு. சிதம்பரம் செட்டியார் ராஜீநாமா

தென்னிந்திய வர்த்தக சங்கத்தின் பிரதிநிதியாக சென்னை நகரசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட திரு. மு. சித. சிதம்பரம் செட்டியார் அவர்கள் தம் நகரசபை மெம்பர் ஸ்தானத்தை ராஜீநாமாச் செய்துவிட்டார்.

## புதுக்கோட்டை உத்தரவு

சமஸ்தானத்தில் நியமிக்கப்படும் உத்தியோகங்கள் சம்பந்தமாக தர்பார் விளம்பரத்தில் பின்வரும் விஷயம் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

"சமஸ்தான சேவைக்கு முதன் முதலாக நியமனங்கள் செய்யும்பொழுது அடியிற்கண்ட கொள்கைகள் சாதாரணமாக அநுஷ்டிக்கப்படும்.

(a) மற்ற விஷயங்கள் சமமாயிருக்கையில்,

(i) வெளிப் பிரதேசங்களைச் சேர்ந்தவர்களைக் காட்டிலும் சமஸ்தான பிரஜைகளுக்குச் சலுகை காட்டப்படும்.

(ii) குறைந்த யோக்கியதாம்சங்களுள்ள அபேக்ஷகர்களைக் காட்டிலும் உயர்ந்த யோக்கியதாம்சங்கள் உள்ள அபேக்ஷகர்களுக்கு சலுகைக் காட்டப்படும்.

(d) பிராமணர்களைக் காட்டிலும் பிராமணரல்லாதாருக்குச் சலுகைக் காட்டப்படும்; பிராமணரல்லாதாருக்குள் முதலெடுப்பில் முஸ்லீம்களுக்கும், அடுத்தபடியாக பிற்போக்கு சமூகத்தினரைச் சேர்ந்தவர்களுக்கும் சலுகை காட்டப்படும்.

(c) ஒரு பிராமணரல்லாதார் S. S. L. C பரீக்ஷை தேறியிருந்தால் எந்த உத்தியோகத்திற்கும் லாயக்காவார்; ஆனால் ஒரு பிராமணர் ஒரு கிராஜுவேட்டா யிருந்தாலொழிய, குமாஸ்தா உத்தியோகத்தி[illegible] அல்லது அதற்கு மேற்பட்ட உத்தியோ[illegible] களுக்கோ லாயக்[illegible]விராகமாட்டார்.

(b) மற்ற விஷயங்கள் சமமாயிருக்கையில், டைப்ரைட்டிங்கில் தேர்ச்சிபெற்றவர்களுக்குச் சலுகை காட்டப்படும்.



## விளம்பரம்.

சிவகெங்கை

டி. மு. கோர்ட்டு

O. P. No. 45 of 37.

சிவகெங்கை அமராவதி அம்மாள் } மனுதார்

குலசேகரபாண்டியன் சேர்வை 1, பிச்சை சேர்வை 2 } கவுண்டர் மனுதார்கள்.

மனுதார் புருஷன் லேட் பெரியசாமி சேர்வைக்கு சேரவேண்டிய கடன்களை வசூல் வாரிசு சர்ட்டிபிகேட்டுக் கோரி மனுச் செய்து 24—11—37உக்கு வாயிதா போடப்பட்டிருப்பதால் ஆக்ஷேபனையுள்ளவர்கள் அன்று பகல் 10 மணிக்கு ஷை கோர்ட்டில் ஆஜராகி தெரிவித்துக்கொள்ளலாம்.

8-11-37

V. லெக்ஷ்மணய்யர், மனுதார் வக்கீல்.

### புதுக்கோட்டையில் நிலவரி

புதுக்கோட்டை சமஸ்தானத்தில் நிலவரியாக ரூபாய் 9,35,000 விதிக்கப்படுகிறது.

### திருப்பத்தூர் தாலூகா கண்டவராயன்பட்டியில் பெண்பாடசாலை அவசியம்

இவ்வூர் கிராமக் காங்கிரஸ் கமிட்டி உபதலைவர் மு.ப.நா. அருணாசலன் எழுதுவது:

திருப்பத்தூர் தாலூகா கண்டவராயன் பட்டியில் படிக்கும் வயதுவந்த பெண் குழந்தைகள் சுமார் (200) வரை இருக்கின்றனர், அவர்களில் 80 குழந்தைகளே ஆண் பாடசாலைகளில் கல்வி பயின்று வருகின்றனர். அக்குழந்தைகளும் போதிய கல்விப் பயிற்சியடைய இயலவில்லை. ஏனெனில் பெண்களுக்கெனத் தனிப்பட்ட கலாசாலை ஏற்படாக் குறையே என்பதிற் சந்தேகமில்லை. இதனையறிந்த யாங்கள் இக்குறையை போக்கிப் பெண் கல்லூரி நிறுவுமாறு பொதுஜனங்கள் பலருடைய கையொப்பமிட்ட விண்ணப்பம் ஒன்றை வடக்கு இராமனாதபுரம் ஜில்லா போர்டுக்கு அனுப்பி வைத்தோம். அது பயனற்றதாய் ஒழிந்ததன்றி கவனிக்கப்பட்டதாகத் தோன்றவில்லை. அஃதங்ஙனமாயினும் இப்பகுதியில் காங்கிரஸ் அபேக்ஷகர்களாக நின்று ஜில்லா போர்ட்டில் வெற்றி பெற்ற டாக்டர் சுப்பிரமணியம், முகம்மது இபுராஹிம் ஆகிய இவர்களிடத்து யாங்கள் பலமுறை சொல்லியும் அவர்களும் கவனித்ததாகத் தெரியவில்லை. ஆதலால் இனியேனும் இக்குறையை நீக்க டாக்டர் சுப்பிரமணியம் முதலிய காங்கிரஸ் அங்கத்தினர்கள் முன்வருவார்களாக. அடுத்துவரும் போர்டு கூட்டத்தில் இது விஷயத்தை ஆலோசனைக்கு எடுத்துக்கொள்ளத் தூண்டித் தாங்கள் பொதுஜனங்கட்கு கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றிக் காங்கிரஸின் கௌரவத்தை நிலைநாட்ட முயற்சிப்பார்களென்று நம்புகிறேன்.





## "இந்தியா ஒரு சிறை"

### டாக்டர் ராஜன் பிரசங்கம்

வேலூரில் நவம்பர்மீ 3உ கூடிய பெருங் கூட்டத்தில் சென்னை சுகாதார மந்திரி டாக்டர் ராஜன் பின் வருமாறு பேசியிருக்கிறார்:—

"மஹாத்மா காந்திக்கு ஜே"! என்ற கோஷத்துக்கிடையே டாக்டர் ராஜன் எழுந்து பேசியதின் சாரமாவது:— நான் இன்று உங்கள் ஊரில் சூரிய வெப்பமில்லாமல் வருண பகவானின் கருணையில் நடந்து சுற்றிப் பார்த்தேன். என் சொந்த சந்தோஷத்திற்காகவாவது மந்திரி என்ற அதிகார தோரணையின் சந்தோஷத்தை அனுபவிக்கவாவது நான் பதவி வகிக்கவில்லை உங்களுடைய சக்தியால் உங்களுக்குத் தொண்டுபுரியவேண்டியேநாங்கள் மந்திரிகளாய் விளங்குகிறோம். நமது தேசத்து விடுதலை சமீபத்தில் கிடைத்து விடும் என்கிற சூசனை ஒரு சிறிது காண்கிறது. நாங்கள் கவர்னரால் மந்திரிகளாய் நியமிக்கப்படவில்லை. உங்களால் நியமிக்கப்பட்டோம். நீங்கள் வேண்டாமென்று [illegible] நிமிஷம் தெரிவிக்கிறீர்களோ அப்பொழுதே இந்த ஸ்தானத்தை விட்டுவிடுவோம். இந்த புதிய சீர்திருத்தத்தால் நாம் விடுதலை அடையவில்லை. இந்தியா பூராவும் ஓர் பெரிய சிறைக்கோட்டம். அதன் மத்தியில் அநேக உள் சிறைகளெல்லாம் இருந்தன. இப்புதிய திட்டத்தால் உள் சிறைகளெல்லாம் உடைக்கப்பட்டதே ஒழிய வேறல்ல. நம்மிடம் சத்யமும் அஹிம்சையும் தவிர வேறொன்றுமில்லை. இரவு பகல் வித்யாசமின்றி, மனச்சாட்சியுடன் சேவைசெய்ய வேண்டுமென்பதே எங்கள் எண்ணம். 150 வருஷ காலமாய் நம்மீது ஏறி இருக்கும் சுமையைச் சீக்கிரத்தில் போக்கடிக்க முடியாது. நாங்கள் சொல்வதில் செய்யச் சாத்யமில்லாதிருப்பதைக் கட்டாயம் செய்து தீருவதாய் சொல்லிவிட்டுப் போவது அழகல்ல. ராஜாங்கத்திலும் இதுவரையில் இருந்துவந்த அதிகாரிகளையும் வைத்துக் கொண்டு தான் இருக்க வேண்டி இருக்கிறது. ஆனால் அதை இதுவரையில் அதிகாரிகள் என்ற தோரணையில் இருந்ததை, இப்புனித நாட்டின் ஜனத்தொண்டர்கள் என்று மாற்றிவிட்டோம். இப்பொழுது இந்த நாட்டில் ஏழைமக்களின் பரிதாப நிலைமையைப் போக்க வேண்டுமென்று கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறோம். அதில் மதுவிலக்கு என்பதை சட்டமாக்கி, சேலம் ஜில்லாவில் அமுலுக்குக் கொண்டுவந்திருக்கிறோம். முன்பு கள் குடிக்கவேண்டாமென்று மறியல் செய்த எங்களைச் சிறைக்கோட்டத்திற்கு அழைத்துச் சென்ற அதே உத்தியோகஸ்தர் இப்பொழுது கள் குடிப்போரை அந்த ஜில்லாவில் சிறைக்கு அழைத்துச்செல்ல ஏற்பட்டிருக்கிறது. இதைவிட முக்யமான விஷயம் ஒன்றுண்டு. எல்லா பொது மக்களுக்கும் தாதாவாய் விளங்கும் விவசாயிகளின் நிலைமை மிக்க பரிதாபமாய் இருக்கிறது. பத்து வருஷங்களுக்குமுன் நூறு கோடி ரூபாய் கடனாய் இருந்தது. இப்போது இருநூறுகோடியாகி விட்டது. நமக்கு பாடுபட்டு அன்னமளிக்கும் விவசாயிகளை கவனிக்கா விட்டால் மிக்க ஆபத்தாய் முடியும். நம்நாட்டில் பணம் இல்லை என்பதற்கில்லை. சிலர் பணத்தை திரட்டி வைத்துக்கொண்டு அதிக வட்டியில் விவசாயிகளை அமுத்திவைத்திருக்கிறார்கள். அதை நிவர்த்திக்க சட்ட திட்டம் ஏற்பாடுசெய்ய வேண்டி இருக்கிறது. இதன் மத்தியில் நொறுக்கப்படாமலிருக்க வேண்டியே "கடன் நிவாரண மசோதா" கொண்டுவர உத்தேசித்திருக்கிறோமென்று சொல்லி காங்கிரஸ் மந்திரிகளுக்கு ஆதரவளிக்க வேண்டி பெருவாரியாய் காங்கிரஸில் சேர்ந்துழைக்குமாறு கேட்டுக் கொண்டார். தலைவர் முடிவுரைக்குப் பின் வந்தனோபசாரத்தோடு கூட்டம் முடிவுற்றது.



## பம்பாய் சர்க்கார் முடிவு

### ஜனங்களின் முஸ்தீப்பு

பம்பாய், நவ. 5.

பம்பாய் கவர்ன்மெண்டார் அடுத்த ஏப்ரல் மாதம் முதல் தேதி முதற்கொண்டு ஆமதாபாத் நகரில் முதன் முதலாக மதுவிலக்கு முறையைப் பரீக்ஷார்த்தமாக அமுலுக்குக் கொண்டுவரத் தீர்மானித்திருக்கிறார்கள். நகரப் பிரதேசங்களில் சர்க்கார் முதன் முதலாக ஆமதாபாத்திலேயே மதுவிலக்கு முறையை அமுலுக்குக் கொண்டு வருவர்.

இதனால் ஆமதாபாத் இந்தப் பரீக்ஷையை வெற்றிகரமாக்குவதற்காகத் தற்பொழுது முதற்கொண்டே வேண்டிய முஸ்தீப்புகளைச் செய்வதாகவும், முனிசிபாலிட்டியும் நெசவுத் தொழிலாளர் சங்கமும் முதலாளிகளும் இதற்கனுகுணமான நிலையை ஏற்படுத்தச் சேர்ந்து வேலை செய்து வருகிறார்களென்றும் நெசவுத் தொழிலாளர் சங்கத் தலைவரான ஸ்ரீமான் சங்காலால் பாங்கர் கூறினர். அவர் மேலும் கூறியதாவது:—ஆமதாபாத் சம்பந்தப்பட்டமட்டில் சர்க்கார் ஆமதாபாத் நகரிலும் தண்டிலும் அதன்புற நகரங்களிலும் நகர எல்லையைச் சுற்றி 5 மைலுக்குட்பட்டவிடங்களிலும் மதுபானக்கடை வைக்க லைசென்சு எதுவும் கொடுக்கமாட்டார்கள். ஏற்கெனவேயுள்ள மதுபானக்கடை லைசென்சுகள் புதுப்பிக்கப்படவும் மாட்டா. தொழிலாளரே ஏராளமாகச் சாராய தினுசுகளை உபயோகிப்பதால் தொழிலாளர் சங்கம் ஒவ்வொரு சாலிலும் (எளியவர் வாழும் விடுதிகள்) மொகல்லாவிலும் உஷார் சங்கங்களை ஏற்படுத்துவர். குடிகாரர்களைப்பற்றிய தகவலைச் சேகரிக்க உஷார் சங்கத் தொண்டர்கள் இருப்பார்கள். குடிப்பழக்கமுடையவர்களிடமிருந்து 3 மாதகாலத்திற்குள் குடிப் பழக்கத்தை விட்டுவிடுவதாகப் பிரமாணங்கள் வாங்கப்படும். தொழிலாளர் சங்கம் முனிசிபாலிட்டியினுடையவும் முதலாளிகளுடையவும் உதவி பெற்று உல்லாசமாகப் பொழுது போக்குவதற்கான 25 இடங்களை ஆரம்பிக்கமுடியுமென்று நம்புகிறது. குடிப்பழக்கத்திலிருந்து மீட்கப்பட்டவர்கள் இங்கு கூடித் தேகாப்பியாசம் செய்யவும் ஆட்டங்கள் ஆடவும் சங்கீதங்களைக் கேட்கவும் பஜனைகள் செய்யவும் சிற்றுண்டிகள் கொள்ளவும் வசதியிருக்கும் இவ்விடங்களில் ரேடியோக்கள் மூலம் சங்கீதக் கச்சேரிகள் நடைபெறும். மோர், பானகம் முதலியனவும் வழங்கப்படும். குடிக்கேட்டை விளக்க அடிக்கடி கூட்டங்களும் ஊர்வலங்களும் நடைபெறும். எல்லாப் பொதுவிடங்களிலும் குடிக்கேட்டை விளக்கும் சுவரொட்டி விளம்பரங்கள் ஒட்டப்படும். இதுபற்றித் துண்டுப் பிரசுரங்களும் வழங்கப்படும்.

### பிரிட்டிஷ்—இந்தியா வர்த்தகம்

இந்தியாவுக்கும் பிரிட்டனுக்கும் உள்ள வியாபாரப் பேச்சு முறிந்து போய்விட்டது. அதற்குக் காரணம் பிரிட்டன் 135 லட்சம் பவுனுக்கு சலுகை கேட்டிருக்கிறது. 25 லட்சம் பவுனுக்குமேல் சலுகை காட்டுவது நியாயமில்லையென்று இந்தியப் பிரதிநிதிகள் கூறியிருக்கின்றனர். இங்கிலாந்து சென்ற பிரதிநிதிகள் முடிவு இப்படியானபிறகு இனிமேல் டில்லியிலிருந்து பிரிட்டிஷ் கவர்ன்மெண்டு வியாபார சபையுடன் கடிதமூலம் பேச்சு வார்த்தை நடத்தி முடிவுசெய்யும் என்று சொல்லப்படுகிறது. இது அதிசயமல்லவா?


Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd, at the Kumaran Power Press, Karaikudi. (S. INDIA)

